# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI 06.07.2008 ரூ.10.00 96 பக்கங்கள்

# தி.மு.க. - திமுதிமு வீழ்ச்சி!


கல்கி
06.07.2008




கல்கி
தரம் நிரந்தரம்

# உடையழகு... நடையழகு...

"என்னைப் பார்ப்பவர்கள், 'நீ டீ.வி.யில தெரியறதவிட நேர்ல பார்க்கும்போது இன்னும் ரொம்ப அழகாயிருக்கே'ன்னு சொல்வாங்க. நான் ரொம்ப ஒல்லி. ஆனா, டீ.வி.யில கொஞ்சம் பூசினா மாதிரி தெரியறேன்னு நெனைக்கறேன்" - சொல்பவர் 'கலக்கப்போவது யாரு' ரம்யா!

ரம்யா உடை விஷயத்தில் படு செலக்டிவ்! புடைவை என்றால் சுந்தரி, துளஸி, ஆவரணா, ப்ரசாந்தி... என ஏரியா ஏரியாவாகச் சுற்றி புடைவை செலக்ட் செய்வாராம். சல்வார் கமீஸ், குர்தீஸ் என்றால் ஃபேப் இண்டியா, ஷில்பி என பக்காவாக ப்ளான் வைத்திருக்கிறார்.

"எனக்குப் புடைவைன்னா ரொம்பப் பிடிக்கும். புடைவை வாங்கியவுடனே அதை எடுத்துக்கிட்டு ஜில்மில் போயிடுவேன். மாட்சிங்கா காதுக்கு, கழுத்துக்குன்னு வாங்கிடுவேன். என்னிடம் இருக்கும் ப்ளவுஸ் ஒவ்வொன்றும் ஒரு ரகம். நெக் விதவிதமா வைச்சுப்பேன். எம்பிராய்டரி, சீக்வன்ஸ் வச்சு ரிச்சா தைச்சுப்பேன். மெகா ஸ்லீவ்ஸ், ஹால்டர் நெக், டைஅப் ப்ளவுஸ் என வெரைட்டியா வைச்சிருக்கேன்" என்று சொல்லும் ரம்யாவிடம், ஒரு ஸ்பெஷல் காக்ரா-சோளி உண்டு. அதற்கு பவரே தனியாம்! "என் அம்மாவின் ரெட் அண்ட் ப்ளாக் புடைவையை எடுத்து காக்ரா தைச்சுட்டேன். அதை என்னிக்கெல்லாம் போட்டுக்கறேனோ, அன்னைக்கு நல்லதே நடக்கும். 'இத எங்க வாங்கினே?'ன்னு கேக்காதவங்களே கிடையாது. அஞ்சு வருஷமா போட்டு கலக்கிட்டிருக்கேன்..." (அம்மா, உங்களுடைய புடைவைகள் ஜாக்கிரதை.)

சென்னை பெண்களின் ஃபேஷன் மெனுவில் என்னவெல்லாம் இருக்கிறது -விவரமாகப் பட்டியலிட்டார். "சந்தோஷ் சுப்ரமண்யம் சினிமாவில் ஜெனிலியா ட்ரஸ் ரொம்பவே பாப்புலர் ஆயிடுச்சு. இப்ப ஸ்கர்ட்டுதான் லேட்டஸ்ட் க்ரேஸ். ராப்பரவுண்ட் ஸ்கர்ட், டைட் ஸ்கர்ட், ஃப்ரில் வச்ச ஸ்கர்ட்டுன்னு நிறைய சாய்ஸ்! அடுத்தபடியா கேப்ரி பான்ட். அதுவும் ப்ளு, ரெட், எல்லோ, பேபி பிங்க்...ன்னு கூல் கலர்ஸ்! ஆக்ஸஸரீஸ்க்கு ரொம்பவே



# சென்னைப் பெண்...

இம்பார்ட்டென்ஸ். ஒரு காலில் மட்டும் மெல்லியதாக சில்வர் கொலுசு, டோ ரிங் (மெட்டின்னு பெரிசுங்க சொல்லும்) பீட்ஸ் வைச்ச சாண்டல் ஸ்லிப்பர்ஸ்... பாண்டி பஜாரிலேயே எல்லாம் கெடைக்கும். நெக்ஸ்ட், இப்ப கேர்ள்ஸ் டாட்டுயிங் செய்துக்கணும்னு பாக்கறாங்க. பின் முதுகில், இடுப்பில், கழுத்தில் என பர்மனென்ட் டாட்டு. பூ, லவ்வரின் பெயர், எழுதிப்பாங்க. (வீட்ல மம்மி - டாடி பாக்க மாட்டாங்களா?) சென்னையில டாட்டு போட ரெண்டு மூணு ஸ்டுடியோஸ் தான் இருக்கு. பெங்களூரு, மும்பையில மிக அதிகம். இங்கேயிருந்து அங்க போய் போட்டுட்டு வராங்க. அவ்வளவு க்ரேஸ்! நான் போட்டுக்கல. எங்க ஃபேமிலி கொஞ்சம் கன்ஸர்வேடிவ். 'நோ'ன்னு சொல்லிட்டாங்க. அதனால நாளைக்கு ஏதேனும் இன்ஃபெக்ஷன் வந்தா, என்ன பண்றதுன்னு கவலை!''

குட் கேர்ள் ரம்யாவின் ஸ்டைல் மந்த்ரா என்ன?

''நானே வாங்கற ட்ரஸ்னா, ஸ்டெல்லா மாரீஸ் எதிரேயிருக்கும் 'மீ'(me)க்குப் போவேன். சூப்பரா இருக்கும். நுங்கம்பாக்கத்திலிருக்கும் 'கூல் க்ளப்'பிலும் ட்ரஸ் வாங்குவேன். ஷோ பண்ணும்போது கூட ரொம்ப கவனமா இருப்பேன். எப்படி உட்காரணும், ட்ரஸ் டைட்டா இருக்கான்னு ரொம்ப கான்ஷியஸா இருப்பேன். ஷோ நேரம் போக டெய்லி எங்கே போனாலும், நோ மேக் கப்! ஒன்லி லிப் க்ளாஸ், கண்ணுக்கு காஜல்... தலைமுடியையும் லூஸா விட்டுப்பேன். வேறு ஸ்டைல் கிடையாது. ஸ்ட்ரெய்ட்டெனிங் பண்ணிட்டிருக்கேன். தினமும் ஒன்னரை மணி நேரம் ஜிம்மில் எக்ஸர்சைஸ் காலையில. சாப்பாட்டில் நோ ரைஸ். வெளியில போனாலும் பிட்ஸா, கேக், ஐஸ்க்ரீம், சாக்லேட்னு வெட்ட மாட்டேன். காஷுவலா ட்ரஸ் பண்ணிக்கத்தான் பிடிக்கும். டீ ஷர்ட், ஜீன்ஸ், ட்ராக் பான்ட்டில் என்னைப் பார்க்கலாம்'' என்று சொல்லும் ரம்யாவின் பார்வையில், பிரமாதமான ட்ரஸ் சென்ஸ் உள்ளவர்கள் யார்?

''அனிதா ரத்னம்.''

– லதா சேகர்

செல்ல ட்ரஸ்!




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் :
044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

பெரியாரை விட்டுப் பிரிந்து வந்து தி.மு.க. என்ற தனி இயக்கத்தைக் கண்ட போது, "வெட்கப்படுகிறோம்; வேதனைப் படுகிறோம்; விரட்டப்படுகிறோம்" என்றார் அண்ணாதுரை. இன்று இதே மனநிலை யில்தான் இருக்கின்றனர் தி.மு.க. மூத்த உடன்பிறப்புகள். தி.மு.க. என்ற கட்சி ஒரு குடும்பத்துக்குள் சிறைவைக்கப்பட்டிருக் கிறது என்பது அவர்களது வருத்தம். எப்படி நிகழ்ந்தது இந்த வீழ்ச்சி? சற்றே பின் னோக்கிச் செல்வோமா?

### 1940களில்...

● தி.மு.க. என்ற இயக் கத்தைத் துவங்குவதற்கான ஆலோசனைக் கூட்டம், அண்ணா தலைமையில் நீதிக்கட்சி பிரமுகர் சண் முகம் பிள்ளை வீட்டில் 1949ஆம் ஆண்டு செப்டெம் பர் 17ஆம் தேதி நடக்கிறது. அதில் கருணாநிதி கலந்து கொள்ளவில்லை. அண்ணா நடத்திய 'திராவிட நாடு' இதழில் 'இளமை பலி' கதையின் மூலம் 1942ல் அவருக்கு அறிமுகமாகிறார் கருணா நிதி. தம் எழுத்துத் திறமைக்காக 1946ல் பெரியாரால் குடியரசு பத்திரிகையின் துணை ஆசிரியராக நியமிக்கப்படுகிறார்.

● அடுத்த நாள் ராபின்சன் பூங்கா கூட் டத்தில் மட்டும் கலந்துகொண்டுவிட்டு அன்றிரவே, சேலம் மாடர்ன் தியேட்டர் ஸுக்குக் கதை - வசனம் எழுதப் புறப் பட்டுவிடுகிறார் கருணாநிதி.

● தி.மு.க.வின் பொதுச் செயலாளராக



# தி.மு.க. - திமுதிமு வீழ்ச்சி!

அண்ணா தேர்ந்தெடுக்கப்படுகிறபோது, கருணாநிதி பிரசாரக் குழு உறுப்பினர்.

### 1950களில்...

● தமது பேச்சு, எழுத்துத் திறமை, திரையுலகச் செல்வாக்கு இவற்றின் மூலம் 1952ல் செயற்குழு உறுப்பினராக உயர்கிறார் மு.க.

● 1953ல் கல்லக்குடி போராட்டம். டால்மியாபுரம் என்ற பெயரை கல்லக்குடி என்று மாற்றக்கோரி, இரயில் தண்டவாளத்தில் தலை வைத்துப் படுத்ததால்,





கட்சிக்குள்ளும் பொது மக்கள் மத்தியிலும் கருணாநிதியின் செல்வாக்கு வளர்கிறது.

● 1957 - குளித்தலை சட்டமன்ற உறுப்பினராக கருணாநிதி தேர்வு. இந்தக் கால கட்டத்தில் திரைப்பட வசனங்கள் மூலம் கருணாநிதியின் புகழ் மேலும் பரவ, அவரைச் சுற்றி ஒரு குழு உருவாகிறது.

● கருணாநிதி Vs ஈ.வெ.கி. சம்பத் பனிப்போர் உச்சம். 1959 வேலூர் பொதுக் குழுவில் சம்பத் தாக்கப்படுகிறார்.

### 1960களில்...

● 1960ஆம் ஆண்டு உட்கட்சித் தேர்தலில் குழு மனப்பான்மையை கருணாநிதி ஊக்குவிக்கிறார் என்ற கிசுகிசு எழ, 'குமுதம்' அண்ணாவின் நாற்காலிக்குக் கீழ் கருணாநிதி வெடிகுண்டு வைப்பதாக 'கார்ட்டூன்' போடுகிறது!



● பரந்த திராவிட நாடா... தனித் தமிழ் நாடா? என்ற கருத்து மோதல் கட்சிக்குள் ஏற்பட, தனித் தமிழ்நாடை முன்னிலைப்படுத்திய சம்பத், கட்சியை விட்டு விலகுகிறார்.

● கட்சியின் பொருளாளராக இருந்த கருணாநிதியின் செல்வாக்கு மேலும் வளர்கிறது.

● கட்சிக்குள் கோஷ்டிகள் செயல்பாடுகள் உச்சத்துக்கு வர அண்ணா, கருணாநிதியை அழைத்து, ''உன்னால் கட்சிக்கு நன்மையும் உண்டு. தீமைகளும் உண்டு'' என்று கடிந்து கொள்கிறார்.

● 1962-63ஆம் ஆண்டு திராவிட நாடு கோரிக்கையைக் கைவிடுகிறது தி.மு.க.

● 1965ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பாளையங்கோட்டையில் மு.க. தனிமை சிறைவாசத்தில் இருக்க, இந்திய அளவில் தி.மு.க.வின் பெயரும் கட்சிக்குள் மு.க.வின் செல்வாக்கும் மேன்மேலும் கூடுகின்றன.

● 1967ஆம் ஆண்டு தேர்தலில் வென்று, அண்ணா முதலமைச்சராக, கருணாநிதி பொதுப்பணித்துறை அமைச்சர். முரசொலி மாறன் எம்.பி. ஆகிறார்.

● 23 மாதங்களே ஆட்சியில் இருந்த அண்ணா, உடல்நலக் குறைவால் இறந்து போக, சீனியாரிட்டிபடி நாவலர் நெடுஞ்செழியன் முதல்வராக வரவேண்டும். ஆனால், எம்.ஜி.ஆர்., சத்தியவாணிமுத்து, மதுரை முத்து, அன்பில் தர்மலிங்கம் ஆகியோர் ஆதரிக்க, கருணாநிதி முதல்வராகிறார்.

● அண்ணா இறந்த நான்கே மாதங்களில், நாவலருக்குப் பொதுச் செயலாளர்


★ நாவலர் - அண்ணா

பதவியைக் கொடுத்துவிட்டு, தலைவரா கிறார் கருணாநிதி. அதுவரை பெரியாருக் கென ஒதுக்கி வைக்கப்பட்ட பதவியை கருணாநிதி ஏற்கிறார்.

### 1970களில்...

● 1971ல் இந்திரா காங்கிரஸோடு கூட்டணி. 180 இடங்களில் தி.மு.க. வெற்றி பெற, மீண்டும் கருணாநிதி முதல்வர்.

● கட்சியில் எம்.ஜி.ஆர். செல்வாக்கும், புகழும் கூடுகின்றன.

● 1972ல், கட்சிக் கணக்கைக் கேட்ட எம்.ஜி.ஆர். பிரிந்து சென்று அ.தி.மு.க. வைத் துவக்குகிறார்.

● எமர்ஜென்ஸி காலகட்டம். கருணா நிதி சிறை செல்லவில்லை. ஆனாலும், கட்சியைக் கட்டிக் காத்ததில் அவருக்குப் பெரும்பங்குண்டு.

● மு.க. ஸ்டாலின் ஒரு வருட எமர் ஜென்ஸி மிசா சிறைவாசத்தில் இருக்க, அவரது அரசியல் வாழ்க்கை ஆரம்ப மாகிறது.

● 1977ல் கருணாநிதி தலைமைக்குச் சவால்கள் எழுகின்றன. திருப்பரங்குன்றம் பொதுக் குழுவில், கருணாநிதிக்கு எதிராகக் கையெழுத்து வேட்டை நடத்தியவருள் துரைமுருகனும் ஒருவர். நாவலரும் கட்சியைவிட்டு விலகுகிறார்.

### 1980களில்...

● மு.க.ஸ்டாலின் கட்சியின் இளைஞர ணிச் செயலாளராக நியமிக்கப்பட, இன்று வரை அதே பொறுப்பில் தொடர்கிறார்.

● கட்சியின் மாவட்ட அளவிலும் வாரிசுகள் இடம்பெற ஆரம்பிக்கின்றனர். மு.க. அழகிரி மதுரைக்கு இடம் பெயர் கிறார்.

● எம்.ஜி.ஆர். இறந்தபிறகு அ.தி.மு.க. பிளவு பட, 13 வருட வனவாசத்துக்குப் பிறகு, 1989ல் ஆட்சிக்கு வருகிறார் கருணாநிதி.

### 1990களில்...

● வை.கோ.வின் ஆளுமை, பேச்சுத் திறன் அவருக்குத் தனியாக தொண்டர் வட்டத்தை உருவாக்குகிறது. 'அவரால் என் உயிருக்கு ஆபத்து' என்று உளவுத் துறை அறிக்கையை கருணாநிதி காட்ட, கட்சியை விட்டு வை.கோ. வெளியேறுகிறார்.

● கட்சியில் செங்குத்தான பிளவு. ஒன்பது மாவட்டச் செயலாளர்கள் வை.கோ.வோடு செல்கின்றனர்.

● ஆட்சி அதிகாரம் என்பதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு தி.மு.க. செயல்பட ஆரம்பிக் கிறது.



● 1980களில் மதுரைக்குப் போன அழகிரி, அதன் சுற்று வட்டாரங்களில் ஆதிக் கம் செலுத்த, அவ ருக்கு ஆதரவு - எதிர்ப்பு கோஷ்டிகள் உருவாகின்றன.

### 2000களில்...

● தா.கிருட்டிணன் கொலை செய்யப் படுகிறார். மு.க.ஸ்டாலின், மு.க.அழகிரி இவர்களிடையே பனிப் போர் வலுத்து வெளிச்சத்துக்கு வருகிறது. இதனால் கட்சிக்குள் சலசலப்பு ஏற்பட, அழகிரி கட்சியை விட்டே நீக்கப்படுகிறார். பின்பு சேர்க்கப்படுகிறார்!

● 2001 சட்டமன்றத் தேர்தலில் தோற்றா லும், 2004 பாராளுமன்றத் தேர்தலில் தி.மு.க. கூட்டணி அமோக வெற்றிபெற கூட்டணி வியூகம் உதவுகிறது. முன்பின்

அரசியல் பரிச்சயமற்ற மற்றுமொரு குடும்ப வாரிசான தயாநிதி மாறன் மத்திய அமைச்சராகிறார். அவருக்கு தொலைத் தொடர்புத் துறை அமைச்சர் பொறுப்பு தந்தாக வேண்டும் என்று பிடிவாதம் காட்டுகிறது தி.மு.க. தலைமை.

● 2007ல் அழகிரிக்கு செல்வாக்கு இல்லை என்று மாறன் குடும்ப ஏடான தினகரன் சர்வே வெளியிட, அழகிரி ஆட்கள் மதுரை தினகரன் அலுவலகத்தைத் தாக்க, மூவர் மரணம்.

● தயாநிதி மாறன் - அழகிரி உரசல். அமைச்சர் பதவியை தயாநிதி மாறன் ராஜினாமா செய்ய, கருணாநிதி தமது மற்றொரு வாரிசான கனிமொழியை ராஜ்ய சபா எம்.பி. ஆக்குகிறார். கட்சித் தொடர்பு இன்றி, கவிஞராக மட்டுமே அறியப்பட்ட கனி மொழி, இரவோடு இரவாக அரசியல் வாதி ஆகிறார்.



● இளமை முதல் கட்சிப் பணிகளில் ஈடுபட்ட மு.க.ஸ்டாலினின் அதிருப்தி அரசல் புரசலாகப் பதிவாகிறது. அவரது திடீர் வெளிநாட்டுப் பயணங்கள், அவரது அதிருப்தியின் வெளிப்பாடு என்று தெரிய வருகிறது.

● தா.கிருட்டிணன் கொலை வழக்கில் குற்றவாளியாகச் சேர்க்கப்பட்ட அழகிரியும் மேலும் பலரும், சாட்சியங்கள் இல்லாத நிலையில் விடுவிக்கப் பட, அரசு மேல் முறையீடு செய்வது குறித்து மௌனம் சாதிக்கிறது!

● மதுரை பகுதியில் அழகிரியின் ஆதிக்கம், அவரை மதுரை 'முதல்வர்' என்றே தொண்டர்கள் அழைக்கும் அளவுக்கு வலுக்கிறது.

● மாறன் குடும்பத்து சுமங்கலி நெட்வொர்க்குடன் மோதும் வகையில், அழகிரி ஒரு கேபிள் நிறுவனம் தொடங்குகிறார்.

● கடலூரில் தி.மு.க. மகளிர் அணி மாநாடு. அழகிரியின் மகள் கயல்விழி, முக்



கிய மேடைப் பேச்சாளராக முன் நிறுத் தப்படுகிறார்.

**2011 தேர்தல் - சில கேள்விகள்**

● கருணாநிதி மீண்டும் தேர்தலில் நிற்பாரா?

● தி.மு.க. சார்பில் யாரை முதல்வராக முன்நிறுத்துவார்கள்?

● அந்த முடிவு எடுக்கப்படும்போது குடும்பச் சண்டை வலுக்குமா?

● கடின உழைப்பும் கட்சிக் கோட்பாடுகளில் பற்றும் கொண்ட தொண்டர்களும் இரண்டாம் நிலைத் தலைவர்களும் ஒத்துழைப்பார்களா?

● உட்கட்சி தேர்தல்கள், செயற்குழு, பொதுக்குழு ஆலோசனையின் பேரில் எடுக்கப்படும் முடிவுகள் என்று ஜனநாயக மரபுகளுக்கிடையே மெள்ள கசிந்து வந்த வாரிசு ஆதிக்கம், உட்கட்சி ஜனநாயகத்தை அச்சுறுத்தும் அளவுக்குப் பெருகியுள்ளதை தி.மு.க. தலைமை உணர்ந்துள்ளதா?

● எம்.ஜி.ஆர். வைகோ, போன்றோர் பிரிந்து சென்றதைச் சமாளித்ததுபோல் குடும்ப அரசியல் நெருக்கடியை எதிர் கொள்ள இயலவில்லையே?

● தமிழக அரசியல் சமூக வரலாற்றில் பெருமைப்படத்தக்க வகையில் இடம் பிடித்த ஒரு கட்சியின் கட்டமைப்பும் எதிர் காலமும் கலகலத்துப் போயிருப்பதை மறுக்க முடியுமா?

**- ப்ரியன்**





'ஜல்லிக்கட்டு சடபுட வெட்டு
துள்ளிக்கிட்டுப் பாயுது மாடு!
வேட்டி வரிஞ்சிக் கட்டி
போட்டி தொடங்கிடிச்சி!
ஈட்டிக் கொம்புக்காள வந்தாச்சு!
மண்ணைப் பறிச்சுக்கிட்டு
கண்ணை உருட்டுமத
மடக்கிப் புடிக்கணும்
அண்ணாச்சி!'

என்கிறது ஒரு கிராமத்துப் பாடல்.

# கல்லைத்

**வீ**ரத்தைக் காட்டும் வழக்கமே, ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்கிற அடிப்படையில் வந்ததுதான். மலைகளிலும் காடுகளிலும் வாழ்ந்த மனிதர்களின் முக்கியத் தொழிலாக வேட்டையாடுதல் இருந்த காலம். தங்களை விரும்பும் ஆடவனிடம், வீரம் என்னும் தகுதியைப் பெண்கள் எதிர்பார்த்தனர்.

தமிழர்களின் வீர மரபில் ஏறு தழுவுதல் என்பது உருவானதும் இப்படித்தான். தற்போது ஜல்லிக்கட்டு என்று குறிப்பிடுகிறோம். ஒரு பெண், தன்னை மணக்கப் போகும் வீரனை, ஏறு தழுவுதல் மூலமாகத்தான் தேர்ந்தெடுப்பாள். ஒரு கட்டிளங்காளை, பெண்ணின் மனத்தைத் தொட வேண்டுமானால், அவன் வளர்த்து வரும் முரட்டுக் காளையைத் தனியொரு மனிதனாக அடக்கி வெல்ல வேண்டும். அப்போதுதான் அவளுடைய மனம் கனியும். காணும் பொங்கல் அன்றுதான் பெரும்பாலும் பெண்கள் வெளியே வருவார்கள். அப்போது நடக்கும் ஜல்லிக்கட்டில் கலந்துகொண்டு, ஆண்கள் தங்கள் வீரத்தைக் காட்டுவார்கள்.

**தெ**ன்தமிழ்நாட்டுக் கிராமங்களில் மாப்பிள்ளைக் கல் என்றொரு பெரிய கல் இருக்கும். இன்றைக்கு அது பாறை. அதைத் தூக்கினால்தான் பெண் தருவார்கள். இன்றைக்கும் அந்தக் கல் இருக்கிறது. ஆனால், தூக்குவதற்குத்தான் ஆளில்லை!

ஒரு நாட்டினுடைய வீரம் என்பது, தந்திரமாக எதிரியை வெல்வது. வீட்டில் வீரம் என்பது அன்பால் வெல்வது. வீதியில் காட்டும் வீரம் வெறும் வாய்ச் சவடால்; விவேகமற்றது. வாய்த் தகராறு, முற்றி கைகலப்பு ஆகும்; வம்பு வந்து சேரும்; அவமானத்தை உருவாக்கும்.

விவேகமில்லாத வீரமும் வீரமில்லாத விவேகமும் பயனற்றவை. ஒரு மனிதன் அல்லது சமூகம் நல்வழியில் இறுதி வரை உறுதியாகச் செல்வதுதான் சரியான வீரம்.

**பு**றநானூற்றுப் பாடல்கள் தமிழனின் வீர மரபைப் புகழ்ந்து பாடுகின்றன. வீர

உணர்வை விளையாட்டுகளின் வடிவத்தில் வளர்த்து வந்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள். கம்பு சுற்றுதல், உறியடித்தல், ஜல்லிக்கட்டு, மாட்டு வண்டிப் போட்டி, கபடி... போன்றவை உடல் பலத்தையும் வீர உணர்வையும் வெளிப்படுத்தும் அறிகுறிகள்.

**வி**வேகமான வீரம் என்பதற்கு ஒரு கதை இருக்கு.

புத்தர்பிரான், ஒருநாள் கசாப்புக் கடைக்காரனிடம் சென்று கையேந்தினார். அவன் காறி உமிழ்ந்து திட்டினான். அவர் கோபப்படவில்லை. முதல் நாள், இரண்டாம் நாள் என்று தொடர்ந்து நான்கு நாட்களும் சென்று கேட்டார். அவன் கத்தினான்; குதித்தான்; வெட்டுவேன் என்றான். இறுதியில் களைத்துப் போய், ''உங்களுக்குக் கோபமே வரவில்லையே... எப்படி?'' என்றான்.

# தூக்கினால்தான் கல்யாணம்!



அதற்கு புத்தர் சொன்னார்:

''நீ எனக்கு ஓர் ஆட்டைக் கொடுத்து அதை நான் வாங்கிக் கொள்ளவில்லை என்றால், அது யாருக்குச் சொந்தம்?''

''எனக்குத்தான் சொந்தம்'' என்றான் அவன். ''அதைப் போலத்தான் நீ திட்டிய திட்டுகளை நான் வாங்கிக்கொள்ளவில்லை. அவை உனக்கேதான்'' என்றார்.

வீரம் என்பது சக்தி. அதை எதற்காக, எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்தே அது பாராட்டப்படுகிறது.

எழுத்தாக்கம்: **சிவன்**

**(அடுத்த வாரம் அனிதா குப்புசாமி)**

'ப்ரௌவ்சிங்'கில் உட்கார்ந்து நம்ம ஆளுங்க பண்ற ரவுசுக்கு அளவே இல்லை. கம்ப்யூட்டரைக் கட்டிப்பிடிச்சுக்கிட்டு, நேரம் காலம் தெரியாம, 'நெட்'டுக்குள்ளேயே இருக்கற இளைய தலைமுறை பெத்தவங்க வயித்தெரிச்சல நிறையவே கொட்டிக்குது!

'இப்ப உள்ள பசங்க, மௌஸை'க்ளிக்' பண்ணிக்கிட்டே இருக்காங்களே! உருப்படியா ஏதாச்சும் பண்றாங்களாய்யா...' என்று சாலமன் பாப்பையா போல் மனதில் நினைத்துக்கொண்டு, நடுவராய் ஒரு 'நெட் கஃபே' க்குள் நுழைந்தோம்.

**ரமேஷ், நாராயணன், குமாரசாமி** - இந்த மூவர் கூட்டணியை முதலில் முற்றுகையிட்டதும், 'குஷி' மூடில் நம்முடன் பேசத் துவங்கினார் குமாரசாமி. ''ஹலோ சார்! நாங்கல்லாம் ரொம்ப நல்ல பசங்கதான். ஆனா, எங்க முன்னாடி யாராச்சும் 'கில்மா' வெப்சைட் பாக்கறப்போ, எங்களுக்கும் பாக்கத் தோணுது.''

''சப்ஜெக்ட்' ரிலேட்டடாத்தான்




**கெஸ்ட் டயலாக்!**

## கடலுக்கு :.பிஷ்ஷிங் நெட் காதலுக்கு இன்டர் நெட்

# காதல்.காம்




நெட்ல பாத்துக்கிட்டு இருக்கேன்'' என நாராயணன், நக்கல் அடிக்காமல் சீரியஸாய் சொல்ல, ''மாப்ளே! எந்த சப்ஜெக்டைன்னு சொல்லு'' என்று குமாரசாமி குறுக்கே புகுந்தார். ''நானெல்லாம் 'அந்த' மாதிரி பையன் கிடையாது. (நம்பிட்டோம்...!) மெடிக்கல் சம்பந்தமா எவ்வளவோ விஷயங்கள் நெட்ல குவிஞ்சு கிடக்கு. வேலை வாய்ப்புத் தகவல்கள் அட்சய பாத்திரம் மாதிரி அள்ள அள்ள வந்துக்கிட்டே இருக்கு. இந்த மாதிரி எல்லாம் இருக்கிறதால, இன்டர்நெட்டை ஒரு வரப்பிரசாதம் மாதிரி நினைச்சு

## Mr.மக் மொழி

ஏ.ஸிக்காக
நெட் கஃபே நாடும்
ராஜாக்களே!
ஓ.ஸிக்குப் பார்க்க
முடியாது இங்கே...
ஈ.ஸியா
பாக்கெட் மணி
கிடைத்தா மட்டும்
வாங்க கிரேஸியா
ஆகித் திரும்ப...!



## காஃபி ஷாப்


* ராஜ்

பயன்படுத்திக்கிட்டே இருக்கேன்'' என ரமேஷ் சொல்ல, ''எப்படிடா இப்படிப் பஞ்சாமிர்தமாய் பாயிண்ட்டுகளா கொட்டற?' என்று மீண்டும் குறுக்கே புகுந்தார், குமாரசாமி.

சில நேரங்களில் யூஸ்ஃபுல்லாகவும், பல நேரங்களில் 'பலான' விஷயங்களைப் பார்க்கவும் இளைஞர்கள் நெட்டைப் பயன்படுத்துகின்றனர் என்ற பொதுவான கருத்தை மூவரும் முழங்க, ராமசாமி - ராஜ் இருந்த கம்ப்யூட்டர் பக்கம் 'மூவ்' ஆனோம்.

கேர்ள் ஃப்ரெண்ட்ஸ் லிங்க் கிடைக்காதவங்கதான், நெட்ல போயி ஃப்ரெண்ட் பிடிக்கறாங்க; அதுக்காக நிறைய டைம் ஸ்பெண்ட் பண்றாங்கன்னு ஒரு கருத்து இருக்கு. 'நீங்க எப்படி'ன்னு ராமசாமிகிட்ட, ஒரு 'பிட்' கேள்வியைப் போட்டோம். ''எனக்கு கேர்ள் ஃப்ரெண்ட்ஸ் இருக்காங்க... ஸோ...நோ...ப்ராப்ளம். அதனால இன்டர்நெட்ல கேர்ள் ஃப்ரெண்ட் தேடினதே இல்ல'' என்று எஸ்கேப் ஆனார்.

''நான் நிறைய 'ஸெர்ச்' பண்ணிக்கிட்டே இருப்பேன்...'' (எதை 'ஸெர்ச்' பண்ணுவீங்க?) என்று மீண்டும் வலைக்குள் புகுந்தார், ராஜ்.

ஒண்ணும் தெரியாத பாப்பாவாய், கடைசி வரை நம்மிடம் எதுவும் பேசாமல் அமைதி காத்தார், ரமேஷ். ஆனால், சஞ்சய் சரளமாய்ப் பேசினார்... ''எனக்கு இப்ப மேரேஜ் ஆயிடுச்சு, நிறைய பொறுப்பு வந்திருக்கு. மேரேஜுக்கு முன்னாடி 'அன்வான்டட் வெப்சைட்டு'களப் பார்த்து, டைம் பாஸ் பண்ணியது உண்டு. இப்பல்லாம் வொர்க் ரிப்போர்ட் கொடுத்துட்டுப் போய்க்கிட்டே இருப்பேன்.''

'நெட் கஃபே'யிலிருந்து வெளியேறத் தயாரானபோது, ''சார்... ஆரம்பத்துல நெட்லே ஏ.பி.சி.டிகூடத் தெரியாது. ஆனா, இப்ப இஸட் வரைக்கும் அத்துப்படி'' என சம்மன் இன்றி நம்மிடம் ஆஜரானார் நாராயணன்.

தகவல் கடலா இருக்கற இன்டர்நெட்டை, 'கடலை' போடறதுக்கும் 'கசமுசா' சீன் பாக்கறதுக்குமே யூஸ் பண்ணும் யூத் தான் அதிகம்னு நம்ம சாம்பிள் ஸர்வே சொல்லுது. மாறுபடறவங்க, தங்களோட கருத்துகளை mistermug@kalkiweekly.comன்ற முகவரிக்கு அனுப்புங்களேன்!

- எம்.திரவியமுருகன்



# கல்கி




**2008 ஜூலை 6**
**ஸர்வதாரி ஆனி 22**
**மலர் : 66**
**இதழ் : 49**


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## அரசையே அச்சுறுத்தும் அணுசக்தி ஒப்பந்தம்!

'அமெரிக்காவுடனான அணுசக்தி ஒப்பந்த விஷயத்தில் எவ்வித சமரசத்துக்கும் தயாராயில்லை' என்று இடதுசாரிகள் பட்டவர்த்தனமாக அறிவித்துவிட்டனர்! தி.மு.க. மட்டும் எப்படியேனும் சிக்கலை விடுவித்துவிடும் நம்பிக்கையில் இருக்கிறது: 'இப்போதைக்குத் தேர்தல் வராது' என்று டி.ஆர்.பாலு திட்டவட்டமாகச் சொல்லியிருக்கிறார். 'ஒப்பந்தத்தை தி.மு.க. ஆதரிக்கிறது; அதே சமயத்தில் கம்யூனிஸ்டுகளையும் ஆதரிக்கிறது' என்று தெரிவித்துள்ளார் டி.ஆர்.பாலு! முரண்பாடுகளுக்கு நடுவே ஊசலாடிக் கொண்டிருக்கிறது மத்திய கூட்டணி அரசு!

அமெரிக்க எதிர்ப்பு என்கிற அரசியல் கோட்பாட்டின் அடிப்படையில் கம்யூனிஸ்டுகள் இயங்குவது, இப்பிரச்னைக்கு அரசியல் பூச்சைக் கொடுத்திருக்கிறது. ஆனால், மூன்று முன்னணி அணு விஞ்ஞானிகளான ஏ.கோபாலகிருஷ்ணன், பி.கே.அய்யங்கார், ஏ.என். பிரசாத் ஆகியோர் முன்வைக்கும் குற்றச்சாட்டுகள், மத்திய அரசின் நேர்மையையும் நாணயத்தையுமேகூட கேள்விக்குட்படுத்துகின்றன.

ஒப்பந்தத்தின் பல அம்சங்களை, மத்திய அரசு வெளிப்படையாகத் தெரிவிக்கவேயில்லை என்பது இம்மூவரின் குற்றச்சாட்டு. கூட்டணிக் கட்சியினரும் விஞ்ஞானிகள் சமூகமும் பொது மக்களும் நன்கு அறியும் வண்ணம், இந்த

யோவ்! கண்டதையும் கழுத்துல
மாட்டிக்கிட்டு நீ தண்ணிக்குள்ள
இறங்கினா நான் கை
கொடுத்துக் காப்பாத்த மாட்டேன்.
ஆமாம்..!
அணுசக்தி ஒப்பந்தம்
LIFE GUARD




123 ஒப்பந்தத்தின் ஷரத்துகளைத் தெளிவுபடுத்துவதுடன், அவற்றை விவாதத்துக்கும் உட்படுத்த வேண்டும் என்கின்றனர் இந்த விஞ்ஞானிகள். இவ்வொப்பந்தத்தின் சில கூறுகள், இந்திய அணுசக்தி துறையை, அமெரிக்க மேலாதிக்கத்துக்கு உட்படுத்திவிடும் என்றும் எச்சரிக்கின்றனர். இந்தியாவின் அணுசக்தி உற்பத்தி மட்டுமின்றி, அயலுறவுக் கொள்கையும் அமெரிக்காவின் கட்டுப்பாட்டுக்கு மாறிவிட இவ்வொப்பந்தம் வகை செய்கிறது என்கின்றனர்!

இவையெல்லாம் நமது நாட்டின் சுதந்திரத்துக்கும் இறையாண்மைக்கும் அச்சுறுத்தல் என்றால், இந்த ஒப்பந்தத்தின் பொருளாதார அபத்தம், நமது நாட்டின் வளர்ச்சிக்குப் பெரிய முட்டுக்கட்டையாக அமையும். ஆம், '123 ஒப்பந்தத்தின் கீழ் உற்பத்தியாகும் அணுமின் சக்தியானது, நம்நாட்டிலே ஏற்கெனவே உற்பத்தியாகிவரும் அனல்/புனல் மின் உற்பத்திச் செலவைக் காட்டிலும் மும்மடங்கு அதிகமாக இருப்பது உறுதி' என்கின்றனர் இந்த விஞ்ஞானிகள்!

கூடுதல் செலவு, சுற்றுச்சூழல் கெடும் ஆபத்து, இறையாண்மைக்கு அச்சுறுத்தல் என்ற முப்பெரும் அபாயங்கள் இருந்தும், இவ்வொப்பந்தத்தை மத்திய அரசு அவசரமாக - அதுவும் அமெரிக்கத் தேர்தல் முடிவதற்குள் - நிறைவேற்ற ஆசைப்படுவது ஏன்? அரசியல் ரீதியான சௌகரியம் கருதி மட்டுமே அவசரப்படவில்லை; அதைக் கடந்த சில ஆதாயங்கள் இருக்கக்கூடும் என்கிற சந்தேகத்துக்கு இடம் கொடுக்கிறது இந்த அவசரப் போக்கு.

இச்சந்தேகத்தை நிவர்த்தி செய்யவும், விஞ்ஞானிகள் கேட்பதுபோல் ஒளிவு மறைவின்றி ஷரத்துகளை விவாதிக்கவும் ஐக்கிய முற்போக்குக் கூட்டணி அரசு வழிவகை செய்வது நல்லது. இல்லையேல், அரசு கவிழ்ந்து, இன்னொரு தேர்தலை நாடு வெகு விரைவில் சந்திக்கும் கட்டாயம் ஏற்படும்.

எதிர்காலத்தில் எந்தக் கட்சி அல்லது கூட்டணி ஆட்சி அமைத்தாலும், இந்திய மின் சக்தி உற்பத்தி விநியோகக் கொள்கையை விஞ்ஞான ரீதியாக ஆராய்ந்து சீர்திருத்த வேண்டியது அவசியம்.



# சிலபஸ் சர்ச்சை

**சி.பி.எஸ்.இ பாடத் திட்டத்தில் ரஜினியின் வாழ்க்கைச் செய்தி பாடமாக வைக்கப்பட்டிருப்பது குறித்து, கல்கி (15.06.08) இதழில் கவர் ஸ்டோரி வெளியிட்டிருந்தோம். வாசகர்களின் விளாசல் கருத்துகள்:**

**ந**டிப்பால் கோடி கோடியாய்ப் பணம் சம்பாதித்தாலும், மக்களுக்கு ஒன்றும் செய்யாதவர்தான் ரஜினி. நடிகர் என்ற ஒரு தகுதியை மட்டும் வைத்துக் கொண்டு, அவரது வாழ்வைப் பாடமாக வைப்பது தேவையில்லாத ஒன்று.

**- க.வேடியப்பன், கும்மிடிப்பூண்டி**

**ப**ள்ளிக்கூடப் பாடத்திட்டத்தில் ரஜினியைப் புகுத்தி, அவருக்கு மாபெரும் இழுக்கைத் தேடித் தந்துவிட்டனர். இதில் நீண்ட கால அரசியல் சதி புதைந்துள்ளது. கவனித்து, கண்டிக்க வேண்டும்.

**- இ.ரங்கசாமி, ஸ்ரீரங்கம்**

**சி**.பி.எஸ்.இ சிலபஸில் ரஜினி பற்றிய பாடம் என்பது ஓர் அபாய ஆரம்பம்தான்! அவரிடமிருந்து இளைஞர்கள் கற்றுக்கொண்டது, ஸ்டைலாக சிகரெட் பிடிப்பதும், குவார்ட்டர் அடிப்பதும்தான்!

**- கே. சண்முகம், ஆதமங்கலம்**

**ர**ஜினி என்பவர், வாழ்க்கையின் அடி மட்டத்திலிருந்து படிப்படியாக உயர்ந்து, இப்போது பெரிய இடத்துக்கு வந்துள்ளார். அது அவரின் தனிப்பட்ட வாழ்க்கையில் மிகவும் பாராட்டப்பட வேண்டிய ஒன்றே. அதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால், பாடங்களில் படிக்க வேண்டிய அளவு அவரின் படங்கள் நிச்சயம் இல்லை என்பதே உண்மை.

**- பழ.கவிதா, புன்செய்ப்புளியம்பட்டி**

**க**லைஞன் என்பவன் சாதி, மதங்களுக்கு அப்பாற்பட்டவன் மட்டுமல்ல, பொது மக்களின் சொத்தும்கூட. அந்த வகையில் தன் சுய உழைப்பால் உயர்ந்த மனிதன் என்று தானே பாடமாக்கப்பட்டுள்ளது. அதற்கு ரஜினி முழுத் தகுதியுள்ளவரே...

**- வெ. ராம்குமார், வேலூர்**

**வ**ரலாற்று நாயகர்களின் வாழ்க்கையைப் பாடமாக்கினால், வருங்காலத் தலைமுறை பலனடையும். ஆனால், நடிகன் என்ற வகையில் ரஜினி பெற்ற வெற்றியில், மற்றவர்கள் கற்றுக்கொள்ள என்ன இருக்கிறதென்று புரியவில்லை.

**- எம். சம்பத், வேலாயுதம்பாளையம்**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை. பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம். சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி. வேலு தெரு. மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 19 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

அப்போ விஜய்க்கு ரெண்டு பல்லுக்கும் நடுவுல இடைவெளி இருந்தது. பெரிய இடைவெளி. ''நீ நடிகனானாலும் சரி, வேற எந்த வேலைக்குப் போனாலும் சரி, முதல்ல இந்தப் பல்லைச் சரி பண்ணிடணும். ஒரு டாக்டர்கிட்டப் போகலாம் வா!''ன்னு சொன்னேன். எப்பவும் போல வரமாட்டேன்னு அடம் பிடிச்சான்.

''மத்த எல்லாத்தையும் விடு. உனக்குக் கல்யாணம் ஆனப்புறம், உன் மனைவியைப் பார்த்துச் சிரிக்கறப்போவாவது அழகாத் தெரியணும்ல''ன்னு சொன்னேன். ஒரு வழியா ஒத்துக்கிட்டான். விஜய லட்சுமி ஆச்சாரியார்னு ஒரு பல் மருத்துவர் இருந்தாங்க. ரொம்பப் பெரிய ஆள். அவங்கதான் விஜய்யோட பல்லுக்கு ட்ரீட்மென்ட் கொடுத்தாங்க.

ரெண்டு பல்லுக்கும் நடுவுல க்ளிப் மாதிரி ஒண்ணை மாட்டினாங்க. ரொம்பக் கடினமான உணவுப்பொருள் எதையும் ஒரு வருஷத்துக்குச் சாப்பிடக்கூடாதுன்னு சொல்லிட்டாங்க. அதுல தோசையும் ஒண்ணு. இட்லி மட்டும் சாப்பிடலாமாம். ஏன்னா, அது சாஃப்ட்டா இருக்கும் இல்லியா? அந்த ஒரு வருஷத்துக்குத் தோசை சாப்பிட முடியாம ரொம்பக் கஷ்டப்பட்டான் விஜய்.

'பூவே உனக்காக', விஜய்யை உரிய முறையில் தமிழ் மக்களுக்கு அறிமுகம் செஞ்ச படம். அந்தப் படம் வந்தப்புறம் தான், நிறைய பேருக்கு விஜய்னு ஒரு ஆர்ட்டிஸ்ட் தமிழ்ல நடிக்க வந்திருக்கான்னே தெரிஞ்சது. நாங்க விஜய்யை அறிமுகப்படுத்தி இருந்தாலும், விக்கிரமன் சாரோட 'பூவே உனக்காக'தான் உண்மையிலேயே எல்லாரையும் திரும்பிப் பாக்க வைச்சது. அதுக்குக் காரணமும் இருக்கு.

அதுக்கு முன்னாடி வந்த எல்லாப் படங்களும் கமர்ஷியலான படங்களா இருந்தன. கிளாமர் கலந்து வந்தன. அந்தப் படங்களையெல்லாம் இளைஞர்களும், காலேஜுக்குப் போற பசங்களும்தான் விரும்பிப் பாத்துக்கிட்டு இருந்தாங்க. அதுக்குக் காரணம் விஜய் டான்ஸ் நல்லா ஆடுவான்; ஃபைட் நல்லா பண்ணுவான். அந்தப் படங்களைக் குடும்பத்தோட பாக்கறதுக்கு நிறைய பேருக்கு யோசனை





" வில்லனா

ஷோபா சந்திரசேகர்

யாக்கூட இருந்திருக்கலாம். 'பூவே உனக்காக' அந்தப் படங்கள்லருந்து சுத்தமா மாறி, வேற ஒரு கலரோட வந்தது. அது வந்ததுக்கு அப்புறமாத்தான், விஜய்க்கு இருந்த அந்தப் பழைய இமேஜ் உடைஞ்சது.

அதுக்காக எல்லாப் படங்களுமே கிளாமர்னும் சொல்ல முடியாது. 'ராஜாவின் பார்வையிலே' ரொம்ப நல்ல படம். அஜீத் சார்கூட அதுல நடிச்சிருந்தாரு. டைரக்டர் சௌந்தரபாண்டியன் ரொம்ப டீஸன்ட்டா படத்தை எடுத்திருந்தார். அதுக்கு அப்புறமாத்தான் 'பூவே உனக்காக' வந்தது; ஆனால், மக்கள் மனசுல நின்னுடுச்சு. அடுத்து வெளிவந்த நிறைய படங்கள் 'விஜய்யோட லைஃப் டைம் படங்கள்'னு சொல்ற மாதிரி அமைஞ்சு போச்சு. 'காதலுக்கு மரியாதை', 'துள்ளாத மனமும் துள்ளும்', 'லவ் டுடே', 'குஷி', 'பிரியமானவளே', 'ப்ரியமுடன்'... இப்படிச் சொல்லிக்கிட்டே போகலாம்.

என்கிட்டப் பேசற எல்லாருமே கேக்கற ஒரு கேள்வி, 'விஜய் அடிக்கடி வீட்டுக்கு வருவாரா?' என்பதுதான். உண்மையைச் சொல்லணும்னா, நான் விஜய்யை நேராப் பாக்கறதைவிட, டீ.வி. யில பாக்கறதுதான் ஜாஸ்தி. அதுக்கு அவனையும் குறை சொல்ல முடியாது. ஷூட்டிங், டப்பிங், டிஸ்கஷன்னு எப்போப் பாத்தாலும் நிக்கறதுக்கு நேரமில்லாம இறக்கை கட்டிப் பறக்கற வேலை.

## நடிக்காதே!"



என் செல்ல தளபதி!

விஜய்தான் அப்படி. மத்தபடி என் மருமக, குழந்தைங்க எல்லாரும் அடிக்கடி வருவாங்க. பாத்துப்போம்; பேசிப்போம்.

என் கணவர் டைரக்‌ஷன்ல விஜய் நடிச்சுக்கிட்டு இருந்தப்போ, எல்லாரும் ஒண்ணா ஷூட்டிங்குக்கும் மத்த இடங்களுக்கும் போவோம், வருவோம். விஜய்யைப் பாக்கறதுக்கு நிறைய நேரம் இருந்தது. வாய்ப்பும் கிடைச்சது. அவன் வெளியாட்கள் எடுக்கற படங்கள்ல நடிக்க ஆரம்பிச்சதுக்கு அப்புறமாத்தான், நான் அவனை ரொம்ப மிஸ் பண்ண ஆரம்பிச்சேன்.

'ப்ரியமுடன்' படத்துல விஜய் கிட்டத்தட்ட வில்லன் மாதிரியான ஒரு கேரக்டர்ல நடிச்சிருப்பான். கதாநாயகிக்காக அவங்களோட அப்பாவையே விஜய் கொலை செய்யற மாதிரி எடுத்திருந்தாங்க. அந்தப் படம் எனக்குப் பெரிய ஷாக்கா இருந்தது.

படம் பாத்துட்டு விஜய்கிட்ட, 'இந்த மாதிரி படத்துல இனிமே நடிக்காத விஜய். நீ என்ன காரணம் சொன்னாலும் ஒத்துக்க மாட்டேன். உன்னை இப்படிப் பாக்கறதுக்கு என்னால முடியாது. தயவுசெஞ்சு எனக்காக இனிமே வில்லனா நடிக்காதே'ன்னு கேட்டுக்கிட்டேன்.

அதே மாதிரி நான் விஜய்கிட்ட சொல்ற இன்னொரு விஷயம் இருக்கு. 'சிகரெட், பீடி பிடிக்கற மாதிரியோ, ட்ரிங்க்ஸ் குடிக்கற மாதிரியோ வர்ற காட்சிகள்ல நடிக்கறதைத் தவிர்த்திடணும்'னு சொல்வேன். அதுக்கு விஜய், 'அது எப்படிம்மா முடியும்? அது கேரக்டர்ம்மா. நீங்க என்னை எப்பவுமே உங்க மகனா நினைச்சுப் பாத்தா, அப்படித்தாம்மா இருக்கும்'னு சொல்வான். என்னால அதையும் ஏத்துக்க முடியல. அப்போ 'நிலாவே வா!', 'ப்ரியமுடன்'ன்னு ரெண்டு படம் வந்தது. 'ப்ரியமுடன்' படம் முழுக்க சிகரெட் பிடிச்சுக்கிட்டு இருப்பான். 'நிலாவே வா'ல பீடி பிடிப்பான்.

நடிகர்கள் ஒரு கட்டத்தைத் தாண்டி வளர ஆரம்பிச்சதும், ரசிகர்கள் அதிகமாயிடறாங்க. அந்த ரசிகர்களுக்கு நடிகர் கடவுளா ஆயிடறார். ரசிகர்களோட எத்தனையோ விஷயங்களுக்கு நடிகர்தான் முன் மாதிரியா இருக்கார். இது ஏன்னு தெரியல.



## என்ன பரிசு?

- சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட்...
- குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்கள்

# விஜய் வின்னர்ஸ் - 9

## தொடர் சங்கிலிப் போட்டி கூப்பன்

கட் & கீப்

ஆனா, அது அப்படித்தான். அதனால்தான் அதைத் தவிர்த்திடு விஜய்ன்னு அடிக்கடி சொல்லிக்கிட்டு இருப்பேன்.

(தொடரும்)

எழுத்து வடிவம் : பாலு சத்யா

ஹலோ வாசகர்களே!

**ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்லை. போன வாரப் போட்டிக்கு மளமளன்னு என்ட்ரீஸ் குவியுது!**

- விஜய் வின்னர்ஸ் - 6 தொடர் சங்கிலிப் போட்டிக்கான முடிவும், இந்த வார கூப்பனும் பக்கம் 22ல் உள்ளன.
- பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!
- நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரிலிருந்து வரும். சரியான விடைகளை 'டிக்' அடிச்சு கூப்பனையும் நிரப்பி, அந்தப் பக்கத்தைக் கத்தரிச்சு அனுப்பணும்.
- ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு!
- வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம்-21ஆம் பக்கம் இருக்கு)
- பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.
- இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்க நகரத்து ஏஜென்ட் மூலமா கிடைக்க உதவி செய்யறோம். ஹலோ, டயல் : 4343 8888
- போட்டி குறித்த முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.



# விஜய் வின்னர்ஸ்-6

## தொடர் சங்கிலிப் போட்டி பரிசு பெற்றோர் விவரம்...

1. என்.சிவப்ரியா, சென்னை
2. ஏ.நிகிதா, தேனி
3. வி.ஆர்.ராஜேஷ், சென்னை
4. எம்.அந்தோணி பாக்யராஜ், சென்னை
5. ஆர்.நாகராஜன், சென்னை
6. ஜே.சந்தியா, சென்னை
7. அலமேலு இராசகோபால், சென்னை
8. ஜி.வைஷ்ணவி, சென்னை
9. எஸ். சந்தோஷ், சென்னை
10. ச.ஆ.கேசவன், கோவில்பட்டி

* முதல் பத்து கூப்பன்களை அனுப்பிய மேற்கண்டோருக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.
* குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ் அனுப்பி வைக்கப்படும்.

## இந்த வாரக் கேள்விகள்!

கடைசி தேதி : 17.07.2008

1. விஜய்-சிம்ரன் இணைந்த இரண்டாவது படம்?
   - ☐ ப்ரியமுடன் ☐ ப்ரியமானவளே
2. விஜய் வில்லன் ரோலில் நடித்த படம்?
   - ☐ நிலாவே வா ☐ ப்ரியமுடன்
3. விஜய் சமீபத்தில் எத்தனையாவது பிறந்தநாளைக் கொண்டாடினார்?
   - ☐ 30 ☐ 35
4. விஜய்யை நன்கு அறிமுகம் செய்த படம்
   - ☐ பூவே உனக்காக
   - ☐ ராஜாவின் பார்வையிலே
5. கல்லூரியில் விஜய் படித்த கோர்ஸ்...
   - ☐ விஷுவல் கம்யூனிகேஷன்
   - ☐ மல்டி மீடியா

பெயர் : .................................................................... வயது : ...........

முகவரி : ....................................................................................

....................................................................................................

செல் : ................................ இ.மெயில் : ................................................

*போட்டி கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :*

**விஜய் வின்னர்ஸ் போட்டி - 9,**

கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு,

ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032



உ

சிவமயம்

திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டம்

ஸற்குணேஸ்வரபுரம் என்கிற

# கருவேலி

## ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரி ஸமேத

# ஸ்ரீ ஸற்குணேஸ்வர ஸ்வாமி திருக்கோயில்

# ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்

தஞ்சைத் தரணியின் குடவாசல் வட்டத்தில், காவிரியின் தென்கரையில் உள்ளதுதான் அப்பர் ஸ்வாமிகளால் பாடப் பெற்ற, கருவேலி என்னும் கருவிலி திருத்தலம். சற்குண ராஜனால் திருப்பணி செய்யப் பெற்றதால், சற்குணேஸ்வரபுரம் என்றும் பெயர் பெற்ற கோயிலில், அருள்மிகு ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி, ஸ்ரீ ஸர்வாங்க சுந்தரி அம்பாளுடன் சேர்ந்து அருள்பாலிக்கிறார். சிதிலமுற்றிருந்த இவ்வாலயத்தில்,1997ம் ஆண்டு கருவேலி குழந்தை ஐயர் சந்ததியினரால், கிராமவாசிகள், மற்றும் நண்பர்களின் ஒத்துழைப்புடன் திருப்பணிகள் செய்யப் பெற்று, 27.3.1997ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இப்பொழுது ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி சன்னிதிகள், ஸ்வாமி, அம்பாளுக்கு ராஜகோபுரங்கள் புதிதாகக் கட்டப்பட்டும், பிராகாரம், நந்தவனம், திருக்குளம் ஆகியவை புதுப்பிக்கப் பட்டும், ***நிகழும் ஸர்வதாரி வருஷம் ஆனி மாதம் 30ந் தேதி (14.7.2008) மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது.*** 9.7.08 புதன் காலை 9 மணி அளவில் விக்னேஸ்வர பூஜையுடன் தொடங்கி, வியாழன் வாஸ்து சாந்தி. 11.7.08 வெள்ளிக்கிழமை முதல் யாகசாலை பூஜைகள் 6 காலம் தொடர்ந்து நடக்கின்றன. நிகழ்ச்சிக்கு முத்தாய்ப்பாக **14.7.2008 திங்கட்கிழமை காலை 9.30 மணி அளவில் மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது.** அன்று மாலை, திருக்கல்யாணமும், ஸ்வாமி வீதி உலாவும் நடைபெறும்.

15.7.08 செவ்வாய் அன்று மண்டலாபிஷேகம் தொடங்குகிறது. *

அன்பர்கள் அனைவரும் மகா கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்டு இறைவனை தரிசித்து, இகபர பேறு அடைய பிரார்த்திக்கிறோம்.

அவ்வண்ணமே கோரும்
Dr.V. கிருஷ்ணமூர்த்தி,
*பரம்பரை தர்மகர்த்தா*

இங்ஙனம்
திரு.பொன் சிவசங்கரன், M.A
*நிர்வாக அதிகாரி, கூடுதல் பொறுப்பு*

தெய்வத் திருப்பணியில்,
கிராமவாசிகள் மற்றும்
ஸ்ரீ ஸற்குணேஸ்வரர்
கைங்கர்ய சபா (Regd)

* மண்டலாபிஷேகம் செய்ய விரும்புபவர்கள் ஆலய அலுவலகத்தைத் தொடர்பு கொண்டு முன் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

ஸ்ரீ ஸற்குணேஸ்வரர் திருக்கோயில், கருவேலி - 609 501. போன் : 04366 273900.

*சென்னை அலுவலகம் :*

**Sri Sarguneswara Swami Temple Management Committee,**
6A, Warren Road, Mylapore, Chennai - 600 004. Phone : 044-2499 4535

***கருவேலி:*** கும்பகோணம் - பூந்தோட்டம் சாலையில் கூந்தலூருக்கு வடக்கே ஒரு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. கருவேலிக்குப் பேருந்து வசதி உண்டு.

மூன்று நிமிடங்கள் பல்தேய்த்தாலே போதும்!

# இந்தப் புன்னகை

"பல் போனால் சொல் போச்சுன்னு சொல்வாங்க! சொல் போகுதோ இல்லையோ, பற்களைப் பாதுகாக்கத் தவறுபவர்களுக்கு, அவர்களை விட்டு அழகும், ஆரோக்கியமும் ஓடிப் போயிடும்ங்கறது மட்டும் உண்மை!'' என்கிற டாக்டர் எஸ்.ஆர்.முருகேசன், பற்களைப் பாதுகாக்கும் வழிமுறைகள் குறித்துக் கூறுகிறார்!

''குழந்தைகளுக்கு, பெரும்பாலும் பல் சொத்தைதான் பெரிய பிரச்னை! சாக்லேட், பிஸ்கட் மாதிரி ஸ்டிக்கி ஃபுட்ஸ்னு சொல்லக்கூடிய ஒட்டும் உணவு வகைகளை விரும்பிச் சாப்பிடறதால, அந்த உணவுகள் பற்களின் இடுக்குகளில் தங்கி பாக்டீரியாக்களை உருவாக்கி, பல் சொத்தைக்கு வழி வகுக்கிறது.

ஆரம்ப நிலையிலே பல் சொத்தை அவ்வளவா தெரியாது. சூடாகவோ, குளிர்ச்சியாகவோ எதுவும் பருகும்போது பல் கூச்சம் ஏற்படுதுன்னா, 'பல் சொத்தை' துவங்கிடுச்சுன்னு தெரிஞ்சுக்கணும்! இந்த நிலையிலேயே டாக்டரைப் பார்த்துட்டா, பிடுங்க வேண்டிய நிலையிலிருந்து பல்லைக் காப்பாற்றலாம்.

குழந்தைகளுக்கு இரண்டரை வயசு வரைக்கும் முளைக்கிற பால் பற்கள்ல சொத்தைங்கிறது ஒரு பெரிய விஷயமில்லே! அந்தப் பற்கள் விழுந்து, நிரந்தரப் பற்கள் முளைச்சுடும். விரல் சூப்புறதும் பெரிய விஷயம் ஒண்ணுமில்லே! ஐந்து வயசுக்கு மேலே அந்தப் பழக்கம் தொடர்ந்துச்சுன்னா மட்டும் டாக்டர்கிட்டே வந்தா போதும். அந்தப் பழக்கத்தை மாத்திடலாம்.



* டாக்டர் எஸ்.ஆர்.முருகேசன்

குழந்தைகளுக்கு காஸ்ட்லியான டிரஸ் போட்டு அழகுபடுத்தற மாதிரி, பல் பராமரிப்பு எப்படிச் செய்யணும்னு பழக்கப்படுத்தி வைக்கணும்!

பல பேர் பல் தேய்க்கறதை

# என்ன விலை?

ஏதோ கடமையா நினைச்சு மேம்போக்கா செய்யறாங்க. முன்புற பற்களைத் தேய்க்கும்போது மேலிருந்து கீழுமாகவும், கடைவாய்ப் பற்களைத் தேய்க்கும்போது பிரஷ்ஷை சுழற்றியும் தேய்க்கணும்! பிரஷ்ஷை வாயிலே வைச்சிக்கிட்டு மணிக்கணக்கா தேய்க்கறதும், ஒரு நிமிஷ நேரத்துக்குள்ளேயே அவசர அவசரமா தேய்க்கறதும் ரொம்பத் தவறு.

பல் தேய்க்கறதுக்குப் பொதுவா மூன்று நிமிஷ நேரம் போதுமானது. அழுத்தித் தேய்ச்சா பல்லோட எனாமல் பாதிப்படையும்!'' என்கிறார் டாக்டர் முருகேசன்.

''குளிர் பானங்களில், பற்களைப் பாதிக்கற இரசாயனப் பொருள் இருக்கறதால, 'ஸ்டிரா' போட்டு பற்களில் படாமக் குடிக்கறது பெட்டர்! காஃபி, டீ, வெற்றிலைப் பாக்கு வகையறாக்கள் பற்களுக்கு எதிரி!

அடுத்ததா, வாய் துர்நாற்றம் சில பேருக்குப் பெரிய பிரச்னையா இருக்கு! சிறுநீரகக் கோளாறு, வயிற்றுப் புண், நாக்கைச் சரிவர சுத்தம் செய்யாதது போன்ற காரணங்கள் இருந்தாலும், பல் சுத்தம் இல்லையென்றாலும் வாய் துர்நாற்றம் கட்டாயம் வந்துடும்! என்ன சாப்பிட்டாலும் கண்டிப்பா, உடனே வாய் கொப்பளித்துவிட வேண்டும்!

பல் பராமரிப்பில் இன்னைக்கு நவீன யுத்திகள் நிறைய வந்திருக்கு. எப்பேர்ப்பட்ட முகத்தையும் சீரமைச்சு அழகுபடுத்திடலாம். ஆனாலும், பற்களைச் சுத்தமா வைக்கணும்ங்கற அக்கறை ஒவ்வொருத்தருக்கும் அவசியம் இருக்கணும்!'' என்று புன்னகைக்கும் டாக்டர் முருகேசன் சொல்வதுபோல, பற்களைச் சரியான முறையில் பராமரிப்பவர்களைப் பார்த்தால், 'இந்தப் புன்னகை என்ன விலை?' என்று கேட்க ஆர்வம் எழுவது சகஜம்தானே!



**- எம்.ஆர்.இராஜேந்திரன்**

மெகா பட்ஜெட் படம் எடுக்கும் தயாரிப்பாளர்களுக்கு மகா பயம் உண்டாக்கும் அற்பமான பொருள், திருட்டு சி.டி. ஆயிரக்கணக்கான தியேட்டர்களில் ரிலீஸ் செய்யும் படச் சுருள்களில், ஏதாவது ஒன்றைக் கைப்பற்றித் திருட்டுத்தனமாகப் பிரதி செய்ய வழி உண்டு. காவல் துறை தீவிர நடவடிக்கை எடுப்பதால் மாட்டிக்கொண்டதும் கம்பி எண்ண வேண்டி வரும். இப்படிக் கண்காணிக்கும் பொறுப்பை அரசின் தலையில் தூக்கி வைக்காமல், மற்றவர்களும் பங்கு பெற, தொழில்நுட்பம் உதவிக்கு வந்து நிற்கிறது. ரொம்ப சரி, அது டிஜிட்டல் சினிமாவேதான்.

துல்லியமான ஒலி ஒளியோடு, நம் வீட்டு வரவேற்பறைக்கு வரும் டெலிவிஷனும் நூறு வருட சரித்திரம் கொண்ட சினிமாவும் இணையும் புள்ளி டி-சினிமா. திரைப்படத்தின் மாஸ்டர் பிரின்டை டிஜிடைஸ் செய்து கம்ப்யூட்டரில் சேகரிப்பதில் ஆரம்பமாகிறது டிஜிட்டல் சினிமா. இதைத் திரையிட, தியேட்டருக்குப் படப் பெட்டி வராது. தியேட்டரில் ஒரு கம்ப்யூட்டர் மற்றும் அதனோடு இணைத்த டிஜிட்டல் ப்ரொஜக்டர் இருந்தால் போதும். தயாரிப்பாளர் வசமுள்ள மாஸ்டர் பிரின்டின் பத்திரமான பிரதி, தியேட்டர் கம்ப்யூட்டரில் இறக்கப்பட்டு, படம் உடனடி ரிலீஸ்.

எண்மப் படுத்தும்போது ட்ரிபிள் டெஸ் (Triple DES encryption) போன்ற வழிமுறைகளைப் பயன்படுத்தி டிஜிட்டல் பிரதி பூடகமாக்கப்படுகிறது. இப்படிப் பூட்டிய பிரதி, தியேட்டர் கம்ப்யூட்டரிலிருந்து ப்ரொஜக்டருக்கு நகரும்போது, ஒளியும் ஒலியும் பழையபடி உருமாறி திரையில் படம் ஓடும். இந்தச் சங்கேத மொழிபெயர்ப்புக்கான மென்பொருளைப் பொதிந்து வைத்திருப்பது மீடியா ப்ளாக் என்ற எலக்ட்ரானிக் சாதனம். சீல் வைக்கப்பட்டு அதி பத்திரமாக தியேட்டருக்கு வந்து சேரும் மீடியா ப்ளாக்கை ப்ரொஜக்டருக்குள் செருகினால்தான் படம் வெள்ளித் திரையில் தெரியும். மற்றபடிக்கு இதை வைத்து காப்பி எதுவும் எடுக்க முடியாது. எனவே, திருட்டு வி.சி.டி தயாரிக்கத் தலைகீழாக நின்றாலும் நடக்காது.

திருட்டு வி.சி.டி மட்டுமில்லை; மழை பெய்யும் தேசல் பிரின்ட், அவ்வப்போது அறுந்து போகும் பழைய படச் சுருள் போன்ற தொல்லைகளிலிருந்தும் உடனடி நிவாரணம் தருகிறது டிஜிட்டல் சினிமா. ஒரு தடவை டிஜிடைஸ் செய்தால் நூறு தடவை என்ன, அதற்கும் மேலேயும் புத்தம் புதிய காப்பி பெறலாம். சாதா மாஸ்டர் பிரின்டில் இருந்து படச் சுருளாகப் பிரதி எடுக்க ஆகும் செலவில், பத்தில் ஒரு பங்கு கூட டிஜிட்டல் பிரதிக்குச் செலவழிக்க வேண்டியிருக்காது. பிராட்பேண்ட் உபயத்தால் டிஜிடைஸ் செய்யப்பட்ட பிரதியை இன்டர்நெட் மூலமே தயாரிப்பாளரோ, விநியோகஸ்தரோ தியேட்டர்

# ஃபிலிம் இல்லாத

கம்ப்யூட்டருக்கு நேரடியாக அனுப்பி விடலாம். இதனால் இன்னொரு நன்மையும் உண்டு. வேறேதேனும் மாற்றங்கள் செய்ய வேண்டுமென்றாலும், மாஸ்டர் பிரிண்டில் மாற்றி, சகல தியேட்டர்களிலும் அதை உடனுக்குடன் விநியோகித்து விடலாம்.

இது தவிர இன்னொரு சௌகரியமும் உண்டு. அபூர்வமான பழைய படம், தியேட்டர் வாசலை மிதித்து விட்டுப் படப் பெட்டிக்குள் சுருண்டுவிட்ட ஆர்ட் ஃபிலிம் போன்றவற்றைச் சம்பந்தப்பட்ட தயாரிப்பாளர்கள் டிஜிட்டல் மாஸ்டர் காப்பி எடுத்து வைத்துக் கொள்ளலாம்.

1998-ல் சோதனை ஓட்டமாக அமெரிக்காவிலும், ஜப்பான், பிரிட்டனிலும் அறிமுகமான டிஜிட்டல் சினிமா, இந்தப் பத்து வருடங்களில் கொழுகொழு குழந்தையாக வளர்ந்திருக்கிறது. பாரமவுண்ட், டிஸ்னி, எம்.ஜி.எம் போன்ற பெரிய கை ஸ்டுடியோக்கள் சங்கம் அமைத்து டிஜிட்டல் சினிமாவுக்கான தர நிர்ணய அளவுகளை உருவாக்கி வருகின்றன. 35 எம்.எம்., சினிமாஸ்கோப், 70 எம்.எம், என்று ரீல் சினிமாவுக்கு வழிவழியாக ஏற்பட்ட விதிமுறைகள் போன்றவை இவை.

ஹாலிவுட்டில் வருடா வருடம் எடுக்கப்படும் எல்லாப் படங்களையும் டிஜிடைஸ் செய்து வெளியிட்டால் மொத்தத் தயாரிப்புச் செலவு வருடத்துக்கு 4000 கோடி ரூபாய் அளவு குறையும். தயாரிப்பில் செலவு குறைந்தாலும், சாதா ப்ரொஜக்டர் உள்ள தியேட்டரை டிஜிட்டலுக்குக் கட்சி மாற வைக்க, குறைந்தது 50 லட்சம் ரூபாயாவது பிடிக்கும். உலகம் எங்கும் தியேட்டர் உரிமையாளர்கள், கன்னத்தில் வைத்த கையை எடுக்காமல் இது பற்றி யோசித்துக்கொண்டு இருப்பதாக, கடைசியாக வந்த தகவல்கள் தெரிவிக்கின்றன. ●

# சினிமா

இரா. முருகன்

ஒலிம்பிக் - இந்த வார்த்தையைக் கேட்டாலே கிறுகிறுத்துப் போகிறார்கள் சீனர்கள். ஒலிம்பிக் போட்டி நடைபெறும் நகரங்களில் வசிக்கும் மக்கள், தினமும் ஆங்கில வகுப்புகளுக்குச் செல்ல ஆரம்பித்துவிட்டார்கள். ஒலிம்பிக் வரலாறுகளைத் தேடித் தேடிப் படிக்கிறார்கள்.

உலகின் மிகப்பெரிய மக்கள்தொகை கொண்ட தேசமாக இருந்தாலும், சீனாவுக்கு ஒலிம்பிக் என்பது எட்டாக் கனியாகவே இருந்து வந்தது. போட்டி நடத்தும் வாய்ப்பை, பலமுறை கடைசி ரவுண்டில் இழந்திருக்கிறது. 2001ஆம் ஆண்டில், 2008 ஒலிம்பிக் போட்டிக்கான ஏற்பாடுகள் ஆரம்பிக்கப்பட்டபோது, முதல் வேலையாக போட்டி நடக்கும் இடத்துக்கான தேர்வு. வோட்டெடுப்பில் பீஜிங் (சீனா), டொராண்டோ (கனடா), பாரீஸ் (பிரான்சு), இஸ்தான்புல் (துருக்கி), ஒசாகா (ஜப்பான்) ஆகிய நகரங்கள் போட்டியிட்டன.

டொராண்டோவுக்கும் பீஜிங்குக்கும் நடந்த கடுமையான போட்டியில், பெருவாரியான வோட்டு வித்தியாசத்தில், ஒலிம்பிக் போட்டியை ஏற்று நடத்தும் பொறுப்பு சீனாவுக்கு வழங்கப்பட்டது. அவ்வளவுதான், உலகம் இரண்டாகப் பிளந்தது. அபாரத் தேர்வு என்று ஒரு பாதி நாடுகள் கரவொலி எழுப்ப, மீதி தேசங்கள் கடும் கண்டனங்களைத் தெரிவித்தன. ஐரோப்பிய தேசங்களின் கூட்டமைப்பான ஐரோப்பிய பார்லிமென்ட், ஒலிம்பிக் கவுன்சிலின் இந்தத் தீர்மானத்தை எதிர்த்துத் தீர்மானம் நிறைவேற்றியது. 'மனித உரிமை மீறல்






ச. ந. கண்ணன்





# சீனாவின் ஒலிம்பிக் மயக்கம்!

களைச் சர்வசாதாரணமாக அரங்கேற்றும் சீனாவுக்கு, ஒலிம்பிக் போட்டி நடத்த என்ன யோக்கிதை இருக்கிறது' என்று கைநீட்டி கேள்வி எழுப்பின.

சீனா, இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டு வேலை செய்ய ஆரம்பித்தது. ஆரம்பத்தில் குவாங்ஷோ நகரில் ஒலிம்பிக் ஸ்டேடியம் என்று ஒரு பெரிய கான்க்ரீட் மைதானத்தைக் கட்டியது. ஆனாலும், ஏதோ ஒன்று குறைகிறது என்று ஸ்டேடியத்தைப் பார்த்தவர்கள் எல்லாரும் கருதினர். ஆகட்டும் புதிய கட்டட வேலை என்று, சளைக்காமல் இன்னொரு புதிய கான்கிரீட் அதிசயத்தை உருவாக்கத் தொடங்கியது. 2003ல் புதிய ஸ்டேடியத்துக்கான கட்டுமானப் பணிகள் தொடங்கின. ஸ்விட்சர்லாந்தைச் சேர்ந்த ஓர் ஆர்க்கிடெக்சர் நிறுவனம், சீன நிறுவனத்தோடு கைகோத்து குழிவெட்ட ஆரம்பித்தது. ஸ்டேடியத்தைப் பருந்துப் பார்வையில் பார்த்தால், பறவையின் கூடு போலத் தெரியுமாறு வடிவமைத்து, அதேமாதிரி அழகாகக் கட்டியும் முடித்துவிட்டார்கள். ஒலிம்பிக் ஜோதி ஏற்றப்பட்டு, தீம் பாடல் பாடப்பட்டு, படமாக்கப்பட்டு, (உருவாக்கம் - ஜாக்கிசான்) 'ஒலிம்பிக் போட்டிக்கு நாங்கள் தயார்' என்று உலகத்துக்கு அறிவித்துவிட்டது சீனா.

ஆனாலும் சீனாவின் தலைவலிகள் ஒய்ந்தபாடில்லை. 'பீஜிங்கில் காற்று மாசுபட்டிருக்கிறது. இதை உடனே கவனிக்க வேண்டும்' என்று ஒலிம்பிக் கவுன்சில் சீனாவுக்கு எச்சரிக்கை கொடுத்திருக்கிறது. தீவிரவாதிகள் கைவரிசை காட்டக்கூடிய சரியான தருணம் இதுதான் என்ற பயம் வேறு பரவலாக இருந்து வருகிறது.

சீனாவின் கவனம் முழுக்க இப்போது மைதானத்துக்குள் திரும்பியிருக்கிறது. தன்னுடைய நிஜ வலிமையைக் காட்டவேண்டிய இடம் அதுதானே. முதல்முறையாக அமெரிக்காவை வீழ்த்த ஒரு வாய்ப்பு! ஒவ்வொரு ஒலிம்பிக்கிலும், அமெரிக்கா முதலிடம் பெறுவதே வாடிக்கையாகி விட்டது. சென்ற முறை பக்கத்தில் போய் தவறவிட்டது சீனா. வழக்கமாக இரண்டாம், மூன்றாம் இடங்களுக்கு சீனா, ரஷ்யா, ஆஸ்திரேலியா நாடுகளிடையே கடும் போட்டி நடக்கும். இந்த முறை முதல் இடத்துக்கு. ○

தமிழ்ப் படைப்பாளிகள் பேரியக்கம் - இது பா.ம.க. சார்பாகத் தொடங்கப்பட்டிருக்கும் கலை - இலக்கிய அமைப்பு. ஏற்கெனவே தமிழகத்தில் எழுத்தாளர்கள் சங்கங்களும் படைப்பாளிகள் சங்கங்களும் ஏராளம். இந்நிலையில் தமிழ்ப் படைப் பாளிகள் பேரியக்கத்தில் பெரும்பான்மையாக இருப்பவர்கள் 'வன்னிய சமூகத்தைச் சேர்ந்தவர்கள்' என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது. கலை, இலக்கியத்தில் குறிப்பிட்ட சமூகத்தைச் சார்ந்து அமைப்புகள் தோன்றுவது சரியா?

இது பற்றிச் சில பிரமுகர்களிடம் கருத்துக் கேட்டோம்.


* பிரபஞ்சன்

# இலக்கியப் பார்வையில்

**பிரபஞ்சன் - எழுத்தாளர்**

எந்த இலக்கிய இயக்கத்துக்கும் சரியான அரசியல் தத்துவம் வேண்டும், எனது கருத்துப்படி உலக அரசியலில், அமெரிக்க வெளியுறவுக் கொள்கைக்கு எதிரான நிலைப்பாடு. சமூகத்தால், பொருளாதாரத்தால் ஒடுக்கப்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட மக்கள் சார்பாக இருத்தல். பெண்கள் சார்பாகவும் சிறுபான்மையினர்கள் சார்பாகவும் மற்றும் விளிம்பு நிலை மக்கள் சார்பாகவும் நின்று, அவர்கள் பார்வையில் அவர்களுக்கான முன்னேற்ற அரசியலை முன்னெடுத்தல். - மேற்கண்டவற்றை தமிழ்ப் படைப்பாளிகள் பேரியக்கம் கைக்கொள்ளுமானால், அது தோன்றியதில் நியாயம் இருக்கிறது.




* ரவிக்குமார்

**ரவிக்குமார் - எழுத்தாளர்**

தமிழ்ப் படைப்பாளிகள் பேரியக்கத்தில் இருப்பவர்கள் அனைவருமே

படைப்பாளிகள்தாம். படைப்பாளர்கள் சாதிய உணர்வோடு செயல்படுகிறார்களா? என்பதே முக்கியம். அம்பேத்கர் சொன்னது போல சமூகம் என்ற ஒன்றே இங்கு இல்லை. சாதி மட்டுமே இருக்கிறது.

படைப்பாளிக்கு, அடையாளம் என்பதே பாரம் தான். தமிழ்ப் படைப்பாளி என்று சொல்வதே கூட அப்படித்தான். படைப்பாளி என்பவன் எல்லா மொழிகளிலும் படைப்பாளிதான்.

தங்களது உரிமைகளைச் சொல்லவும், தமிழுக்காக வாதிடவும், தமிழ்ப் படைப்பாளிகள் பேரியக்கம் செயல்படுமேயானால், நல்லது. இந்தப் பெயரில் உள்ள 'தமிழ்' என்ற அடையாளமும் தற்காலிகமானதாகவே இருக்க வேண்டும். படைப்புதான் முக்கியம்.

# சாதியா?



* இந்திரன்

**இந்திரன்**
– கலை இலக்கிய விமரிசகர்

**சா**திய அமைப்புகளை ஒட்டி, இலக்கிய இயக்கங்களை உருவாக்குவது என்பது நிச்சயமாகச் சமூகத்தின் நலத்துக்கு எதிரானதுதான். அது எந்தச் சாதியாக இருந்தாலும் சரி!

இந்த இடத்தில் தலித் இலக்கியத்தை ஏற்றுக்கொள்ளும்போது, ஏன் வன்னிய சமூகத்தை முன் நிறுத்தும் இலக்கிய இயக்கங்களை ஏற்கக்கூடாது என்ற வினா எழுகிறது.

இங்கு இந்திய சமூகத்தில் சாதிய அமைப்பு எப்படிக் கட்டப்பட்டிருக்கிறது என்பதைச் சற்றுக் கவனிக்கவேண்டும். இந்து சமூகத்தில் சாதி அமைப்பு என்பது ஏணியைப் போல் ஒன்றின்மீது ஒன்றாகக் கட்டப்பட்டிருக்கிறது. இந்த அமைப்பில் ஒவ்வொரு சாதிக்குக் கீழும் இன்னொரு சாதி அடிமையாக இருக்குமாறு கவனமாகக் கட்டப்பட்டிருக்கிறது. இதன் கடைசி தட்டாக இருக்கும் சூத்திரர்களின் முதுகின் மீதுதான் மொத்த சாதிய அமைப்பும் கட்டப்பட்டிருக்கிறது.

எனவே, இந்தச் சூத்திரர்கள் சாதிய அமைப்பிலிருந்து விடுபடுகிறபோது, மொத்த சாதி அமைப்பும் உடைந்து விழுகிறது. இதனால், இந்தக் கீழ்த்தட்டு தலித் மக்களின் சாதி ரீதியிலான ஒன்றுபடுத்தலும் எழுச்சியும் இன்னொரு சாதி சங்கம் கட்டும் முயற்சி அல்ல. அது மொத்தமாக சாதி அமைப்பையே உடைத்துப் போடும் வேள்வி. டாக்டர் அம்பேத்கர் இதைத்தான் Annihilation of caste என்று குறிப்பிடுகிறார். எனவே, தலித் இலக்கிய உருவாக்கத்துக்கு இருக்கிற சமூகவியல் ரீதியான நியாயம், பிற சாதி சங்கங்களைக் கட்டுவதில் இல்லை.

எனவே, தமிழ்ச் சமூகத்தில் மட்டுமல்லாமல் மொத்த இந்திய சமூகத்தில் கூட, சாதி அமைப்புகளை அடிப்படையாகக் கொண்ட இலக்கிய இயக்கங்கள் தோன்றுவது என்பது ஆரோக்கியமானது அல்ல.

இதற்கிடையில் இந்த இயக்கத்தின் இணைச் செயலாளராகப் பதவியேற்ற பிரம்மராஜனைத் தொடர்பு கொண்டபோது, ''இந்த இயக்கத்திலிருந்து பதவி விலகி இரண்டு நாட்களாகிவிட்டன'' என்றார்!

ஏன்?

– ராம்



✱ 'முனியாண்டி விலங்கியல் மூன்றாமாண்டு' படக் காட்சி...

# சாமியாடி வடிவேலு!

'மெட்டி ஒலி' தொடர் மூலம் எல்லோரையும் கட்டிப் போட்ட இயக்குநர் திருமுருகனின் இரண்டாவது படம் 'முனியாண்டி விலங்கியல் மூன்றாமாண்டு'. அவருடன் பேசியதிலிருந்து சில துளிகள்:

**கதை:** இழப்பின் வலி அறிந்த பெற்றோருக்கும், பொத்திப் பொத்தி வளர்க்கப்பட்ட பிள்ளைக்கும் இடையில் நடக்கும் உணர்வுச் சிக்கல். அந்தஸ்து இடைவெளி கொண்ட இருபாலர்க்குமிடையில் மலரும் காதல்!

**கதை நிகழும் இடம்:** சற்றே வளர்ந்துவிட்ட பள்ளியென்று சொல்லத் தோன்றும், கிராமத்துக் கல்லூரி. தென்னை மரங்கள் பொத்திப் போர்த்தியிருக்கும் திருவிழாக் கொண்டாட்டம்!

**சொரிமுத்து அய்யனாராக வடிவேலு:** ஹீரோ பரத் பற்றிய நினைவிலே பிரமைப் பிடித்ததுபோல இருக்கும் ஹீரோயின் பூர்ணாவுக்குப் பேய் பிடித்ததாக நினைத்து, சாமியாடி வடிவேலு, பேய் விரட்டப் போக, ஒரு கட்டத்தில் அலறல் சத்தம் கேட்கும். பேயை விரட்டி விட்டார் என எல்லோரும் நிம்மதியாக, அலறியபடி ஓடி வருவார் வடிவேலு. ''யப்பா, அந்தப் பிள்ளைக்குப் புடிச்சிருக்கறது பேயில்லப்பா, பேயில்ல'' என்று அலறுவார். இப்படி படம் முழுக்க வடிவேலுவின் காமெடி தர்பார்.

**முனீஸ்வர் செட்:** பல லட்ச ரூபாய் செலவில் பொள்ளாச்சி நகரத்தில் முனீஸ்வரன் கோயில் செட் போட்டுப் படம் எடுத்தோம். தத்ரூபமாக ஊந்திருந்த அந்த செட்டை மக்கள் நிஜ கோயிலாக நினைத்து வழிபட ஆரம்பித்துவிட்டனர். எனவே, படம் முடிஞ்சதும் அந்தச் செட்டை மக்கள் வழிபாட்டுக்கே விட்டுவிட்டோம்.

**பரத் அண்ட் பூர்ணிமா:** என்னோடு பரத் இணையும் இரண்டாவது படம். பரத், இயக்குநரின்ஆர்டிஸ்ட் அவரை எப்படி வேண்டுமானாலும் வளைக்கலாம். எதிர்காலம் பிரகாசமாக உள்ள இளம் ஹீரோக்களில் இவருக்குத் தனி இடம் உண்டு. புதுமுகம் பூர்ணிமா, படத்தைப் பார்த்தால் புதுமுகம் என்று சொல்ல முடியாத அளவுக்குப் பண்பட்ட நடிப்பைத் தந்திருக்கிறார்.

**- ஜான்மதி**

# படிப்பைத் தொடர பரிவுடன் உதவுங்கள்!



* எம்.சங்கீதப்ரியா * ஆர்.காயத்ரி * நா.பாபு

பள்ளிபாளையம், அரசு ஆண்கள் மேல்நிலைப் பள்ளியில் பன்னிரண்டாம் வகுப்பு படித்து வருகிறேன். எனக்கு அப்பா இல்லை. கூலி வேலை செய்யும் என் தாயாருக்கு ஒரு வாரம் முன்னர்தான் அரசு மருத்துவமனையில் அறுவை சிகிச்சை நடைபெற்றது. என் படிப்புக்கு நீங்கள்தான் கருணையுடன் உதவிக் கரம் நீட்ட வேண்டும்.

**- நா.பாபு, பள்ளிபாளையம்**
(நாமக்கல் மாவட்டம்)

சிதம்பரம் பிள்ளை மகளிர் கல்லூரியில் பி.சி.ஏ. மூன்றாம் ஆண்டு படிக்கிறேன். படிப்பில் சிறந்த மாணவி. என் தந்தை முசிறியில் உள்ள பெருமாள் கோயிலில் அர்ச்சகராகப் பணிபுரிகிறார். மாத வருமானம் ரூ.400தான். என் படிப்பைத் தொடர உங்கள் உதவியைப் பெரிதும் எதிர்பார்க்கிறேன்.

**- ஆர்.காயத்ரி, முசிறி**
(திருச்சி மாவட்டம்)

நான் சுவாமி தயானந்தா கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் முதுகலை வணிகவியல் இரண்டாம் ஆண்டு படித்து வருகிறேன். எனது தந்தை விவசாயக் கூலி. மிகக் குறைந்த வருமானம். எனக்கு கல்விக்கான உதவித் தொகை வழங்குமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

**- எம்.சங்கீதப்ரியா, மஞ்சக்குடி**
(திருவாரூர் மாவட்டம்)

இது போன்ற ஆயிரக்கணக்கான கடிதங்களை, **கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை** ஆண்டுதோறும் பெறுகிறது. கல்வி நிறுவனத் தலைவரின் சான்றிதழுடன் பெறப்படும் விண்ணப்பங்களை அறங்காவலர்கள் கவனமுடன் பரிசீலித்து, கல்வியில் சிறந்த, ஆனால் பொருளாதாரத்தில் பின்தங்கிய குடும்பங்களைச் சேர்ந்த மாணவ மாணவியரைத் தேர்ந்தெடுத்து, உதவித் தொகைகளை வழங்கி வருகின்றனர். நடப்பு கல்வி ஆண்டுக்கு ரூபாய் மூன்று லட்சத்துக்கும் அதிகமாக உதவித் தொகைகள் விநியோகமாகும்.

இந்தக் கல்விப் பணியில் பங்கேற்க விரும்பும் கல்கி அன்பர்கள், தங்களால் இயன்ற அளவு நன்கொடையை செக், டிராஃப்ட் அல்லது மணி ஆர்டர் மூலம் Kalki Krishnamurthy Memorial Trust என்ற பெயருக்கு அனுப்பலாம். ரூ.1000க்கும் அதிகமான நன்கொடைகள், மூலதன நிதியில் சேர்க்கப்பட்டு அதிலிருந்து கிடைக்கும் வருவாய், நிரந்தரமாக மாணவ மாணவியருக்கு உதவித் தொகை வழங்க பயன்படுத்தப்படும். அரசு அங்கீகரித்த பத்திரங்களிலேயே மூலதனம் முதலீடாகிறது. நன்கொடைகளுக்கு 80-G பிரிவின் கீழ் வருமான வரி விலக்கு உண்டு.

நன்கொடைகள் அனுப்ப விலாசம் : **நிர்வாக அறங்காவலர், கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை, புது எண் : 14, நாலாவது பிரதான சாலை, கஸ்தூர்பா நகர், சென்னை - 600 020.**

**கல்கி ராஜேந்திரன்,** (நிர்வாக அறங்காவலர்)

அமரர் கல்கி

# கவர்னர் விஜயம்



ஸ்ரீமான் சிவகுருநாதஞ் செட்டியார் மத்தியான போஜனம் ஆன பின்னர், வழக்கம்போல் சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டு பத்திரிகையைப் பிரித்துப் புரட்டினார். தலைப்புகளை மட்டும் பார்த்துக் கொண்டே போன அவர், 'பொய்கை யாற்றுத் தேக்கம்', 'கவர்னர் அஸ்தி வாரக்கல் நாட்டுவார்' என்னும் தலைப்புகளைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போனார். செட்டியாருக்கு மயிர்க் கூச்சல் உண்டாயிற்று. மார்பு சிறிது நேரம் 'பட்' 'பட்' என்று அடித்துக் கொண்டது. சற்று சமாளித்துக்கொண்டு அத்தலைப்புகளின் கீழ் இருந்த செய்தியை முற்றும் படித்தார். அம்மாதம் 20ஆம் தேதி காலை 7 மணிக்கு கவர்னர் துரை... ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி, பொய்கை யாற்றுத் தேக்கத்துக்கு மோட்டாரில் செல்வாரென்பதும், மற்றும் பல விவரங்களும் இருந்தன. செட்டியார் உடனே தமது பிரதம காரியஸ்தர் ஜெயராமையரைக் கூப்பிட்டனுப்பினார். காரியஸ்தர் வந்து சேர்ந்ததும், ''ஐயரே, சங்கதி தெரியுமா?'' என்றார்.

''தெரியாதே! என்ன விசேஷம்?''

''உமக்கென்னய்யா தெரியும்? இதற்குத்தான் பத்திரிகை படியுமென்று உமக்குப் படித்துப் படித்துச் சொல்கிறேன். வருஷத்தில் ரூ.250 செலவழித்து இவ்வளவு பத்திரிகைகள் தருவிக்கிறோமே, பின் எதற்காக? நான் மட்டும் ஜாக்கிரதையாகப் படித்துக்கொண்டு வராவிட்டால், இப்போது என்ன ஆகியிருக்கும்?''

''விஷயம் என்னவென்று எஜமான் சொல்லவில்லையே?''

''நம்மூருக்கு 20ஆம் தேதி கவர்னர் வருகிறார்!''

காரியஸ்தர் இடி விழுந்ததுபோல் வாயைப் பெரிதாகத் திறந்தார். ''ஓ ஓ...'' என்ற சத்தத்தைத் தவிர, வேறு வார்த்தை




அவர் வாயினின்றும் வரவில்லை.

"சரி, மேலே என்ன செய்கிறது?" என்று செட்டியார் கேட்டார்.

"எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட வேண்டியதுதான்."

"20ஆம் தேதி காலை ரயில்வே ஸ்டேஷனுக்குப் போக வேண்டும். நமது மோட்டார் வண்டியில் ஒரு தூசு இல்லாமல் பளபளவென்று தேய்த்து வைக்கச் சொல்லும்."

"பார்த்தீர்களா? நான் பிடிவாதமாக மோட்டார் வண்டி வாங்கத்தான் வேண்டுமென்றது. இப்போது எவ்வளவு பயன் படுகிறது?"

"இந்த முன்யோசனைக்காகத்தானே ஐயரே, உம்மிடத்தில் எனக்கு இவ்வளவு பிரியம்? இருக்கட்டும், நமது வீட்டு வாசலை அலங்கரிக்க வேண்டாமா?"

"நமது வீதி வழியாகக் கவர்னர் போகிறாரா?"

"நிச்சயமில்லை. ஒருவேளை ஸ்டேஷனில் இறங்கி நேரே போய்விடலாம். கலெக்டர் துரையிடம் சொல்லி, நமது வீதி வழியாய்ப் போக ஏற்பாடு செய்ய வேண்டும்."

"முடியாவிட்டாலும் பாதகமில்லை.

எப்படியும் நமது வீடு அலங்கரிக்கப்பட்டிருந்த செய்தி பத்திரிகைகளில் வெளியாகி விடுமல்லவா?''

''அதுவும் உண்மைதான். இருக்கட்டும். கூர்மாவதாரம் ஐயங்காருக்கு இச்செய்தி தெரியாமலிருக்க வேண்டுமே... அவர் தினம் பத்திரிகை என்னைப்போல் கவனமாகப் படிக்கிறாரா?''

''அவருக்குத் தெரிந்தாலும் பாதகமில்லை. தாங்கள் யோசனை செய்ய வேண்டாம். முதலில் அவரிடம் மோட்டார் கிடையாது. பழைய கர்நாடகக் கோச்சு வண்டியில்தான் அவர் வர வேண்டும். மேலும், தங்களுக்கு நினைவில்லையா? கலெக்டர் தர்பாரிலே அவருக்கு ராவ்பகதூர் பட்டம் அளிக்கப்பட்டபோது, அவருடைய வேஷத்தையும், அவர் திரும்பத் திரும்ப சலாம் போட்டதையும் பார்த்து எல்லாரும் 'கொல்' என்று சிரிக்கவில்லையா? அந்த மாதிரிதான் இப்போதும் ஆகும்'' என்றார் காரியஸ்தர்.

அச்சம்பவத்தை நினைத்துச் செட்டியார் இப்போதும் சற்று நகைத்தார். ''இருந்தாலும், நாம் வீடு அலங்காரம் செய்யும் விஷயம் அவருக்குத் தெரியக்கூடாது. எல்லா ஏற்பாடும் செய்து தயாராய் வைத்துக்கொண்டு, 19ஆம் தேதி இரவு பத்து மணிக்கு அலங்காரம் செய்து விடுவோம். ஐயங்காரைக் காலையில் எழுந்து விழிக்கும்படி செய்யலாம்'' என்றார்.

இன்னும் என்னென்ன ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்பதைப் பற்றிச் செட்டியாரும் காரியஸ்தரும் நீண்ட நேரம் யோசித்தார்கள். கடைசியில், பளிச்சென்று ஓர் எண்ணம் உதயமாயிற்று. மறுநாள் நடக்கும் நகரசபைக் கூட்டத்தில், கவர்னருக்கு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்க வேண்டுமென்ற ஒரு தீர்மானத்தைத் தாம் கொண்டு வரப் போவதாகச் செட்டியார் எழுதி, நகர சபையின் தலைவருக்கு அனுப்பினார். பின்னர், காரியஸ்தர் தமது காரியத்தைப் பார்க்கச் சென்றார்.

**ஸ்ரீ**மான் சிவகுருநாதஞ் செட்டியார் பெரிய வியாபாரி. அவர் வசித்த சிறு பட்டணத்தில் மூன்று மாடி வைத்த மாளிகை அவர் ஒருவருக்கே உண்டு. இளமையில் அவர் ஏழையாகவே இருந்தார். முதலில் ஓர் இரும்புக் கடையில் குமாஸ்தாவாக வேலை பார்த்தார். லக்ஷ்மிதேவியின் கடைக்கண் பார்வை அவர்மீது விழுந்தது. தனிக்கடை வைத்து வியாபாரம் நடத்தவே, செல்வம் நாளுக்கு நாள் பெருகிற்று. மகாயுத்தத்துக்குச் சற்று முன்பு ஏராளமான இரும்புச் சரக்குகள் அவருடைய கடையில் தங்கியிருந்தன. யுத்தம் ஆரம்பித்த பின்னர், இரும்புச் சாமான்களின் விலை இருமடங்கு, மும்மடங்காயிற்று. செட்டியார் ஒரேயடியாக லட்சாதிபதியாகிவிட்டார். பின்னர், கௌரவங்களில் ஆசை விழுந்தது. அடுத்த வீட்டு வக்கீல் ராவ்பகதூர் கூர்மாவதாரம் ஐயங்காரைத் தமது வாழ்க்கை உதாரணமாகக் கொண்டார். நடை, உடை, பாவனைகளில் அவரைப் பின்பற்றினார்.

''லீவு போட்டதுக்குக் காரணம் கேட்டா 'தலைவலி'ன்னு சொல்றீங்க, நம்ப முடியலயே..?''

''ஓ.கே. சார், என் பெண்டாட்டி பூரி கட்டையால என் 'தலைல அடிச்சிட்டா,' இப்ப நம்பறீங்களா?''

– வெ.சீதாராமன்





"எல்லோரிடமும் எரிஞ்சு விழுந்து கொண்டு, கோபமாக என்ன எழுதுகிறார் உன் கணவர்?"

"வாய் விட்டுச் சிரிக்க வைக்கும் நகைச்சுவை கதையைத்தான் நல்ல மூடில் எழுதிக்கொண்டு இருக்கிறார்."

– லலிதா செல்லப்பா

ஆங்கில ஆசான் ஒருவரை அமர்த்தி ஆங்கிலம் கற்றுக்கொண்டார். நாகரிக வாழ்க்கைக்குரிய ஆடம்பரங்களனைத்தையும் ஒவ்வொன்றாகக் கைக்கொண்டார். உத்தியோகஸ்தர்களுக்கு அடிக்கடி விருந்து நடத்தினார். பெருந்தொகை செலவு செய்து, நகரசபை அங்கத்தினராகவும் ஆனார். இப்போது அவருடைய மனம் முழுவதும் 'ராவ்பகதூர்' பட்டத்தைப் பற்றி நின்றது. இதனோடு, தாம் ராவ்பகதூர் பட்டம் பெறுவதற்குள், ஐயங்கார், மேல்வகுப்புக்கு, அதாவது திவான் பகதூர் பட்டத்துக்குப் போய்விடாமலிருக்க வேண்டுமே என்ற கவலையும் அவருக்குண்டு. எனவே, கவர்னர் தமது ஊருக்கு விஜயம் செய்யும்போது ஐயங்காரை எந்த விஷயத்திலாவது முந்திக்கொண்டு, கவர்னரின் கவனத்தைக் கவர்ந்து, பட்டம் பெற்றுவிட வேண்டுமென்பது அவருடைய நோக்கம். மேலே குறிப்பிட்ட சம்பாஷணையில், கூர்மாவதாரம் ஐயங்காரின் பெயர் அடிக்கடி அடிபட்டதற்கு இதுதான் காரணமாகும்.

மறுநாள், ஸ்ரீமான் செட்டியார், மகிழ்ச்சி ததும்பிய முகத்துடனே நகரசபைக் கூட்டத்துக்குச் சென்றார். கவர்னருக்கு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்க வேண்டுமென்று தீர்மானத்தைப் பிரேரணை செய்து பேசுவதற்கு ஒரு பிரசங்கத்தைத் தயாரித்துத் தமது சட்டைப் பையில் போட்டுக் கொண்டிருந்தார். அப் பிரசங்கத்தை மூன்று பாகங்களாகப் பிரிக்கலாம். முதல் பகுதியிலே, இந்தியாவுக்கு ஆங்கில ஆட்சியின் பயனாக ஏற்பட்ட நன்மைகளைப் பற்றி வருணித்திருந்தார். இரண்டாவது பகுதியில், கவர்னர் துரையின் பூர்வோத்தரங்கள், குலப்பெருமை, குணச் சிறப்பு மற்றும் கல்யாண குணங்கள் எல்லாவற்றையும் பற்றி விரித்துக் கூறியிருந்தார். மூன்றாம் பகுதியில், கவர்னர் துரை இம்மாகாணத்தில் வந்து பதவியில் அமர்ந்த பின்னர் செய்த, செய்யாத எல்லா நன்மைகளையும் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, ஒரே ஒரு விஷயத்தை மட்டும் மேன்மைதாங்கிய கவர்னர் பிரபுவின் மேலான கவனத்துக்குத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்வது தமது வருந்தத்தக்க கடமையாயிருக்கிறதென்றும், அவருடைய ஆதிக்கத்தில் இராஜவிசுவாசிகளுக்கு ஆதரவு போதாதென்றும், பட்டங்கள் வழங்கும் விஷயத்தில் ஆசாமிகளின் யோக்கியதாம்சங்களைச் சற்றுக் கவனித்து கருணை புரியவேண்டும் என்றும் சொல்லியிருந்தார். இந்தப் பிரசங்கத்துக்கு நகல்கள் எடுத்துத் தமது காரியஸ்தர் மூலம் எல்லாப் பத்திரிகை நிருபர்களுக்கும் அனுப்பி, பிரசங்கம் முழுவதையும் பத்திரிகைகளுக்குத் தந்தியில் அனுப்பும் செலவைத் தாம் ஏற்றுக்கொள்வதாகத் தெரிவித்ததுடன், கவர்னர் விஜயத்துக்கு மறுநாள் தமது வீட்டுக்கு வந்து தம்மைக் கண்டு போகும்படியும் சொல்லியனுப்பினார்.

ஆனால், அந்தோ! அவர் நகரசபைக் கட்டடத்தை அடைந்து ஆசனத்திலமர்ந்ததும், அவர் மகிழ்ச்சி அவ்வளவும் துயரமாகவும், கோபமாகவும் மாறிற்று. ஏனெ



# நாம் மோட்டார் வண்டி வாங்கியது எவ்வளவு பயன்படுகிறது!

னில், ராவ்பகதூர் ஐயங்கார், தம்மை முந்திக்கொண்டு கவர்னர் வரவேற்புத் தீர்மானம் கொண்டு வருவதாக முன்னாடியே அறிவித்துவிட்டாரென்றும், ஆதலால் அவருடைய தீர்மானம்தான் முதலில் வருமென்றும் தெரிய வந்தன. ஆனாலும், செட்டியார் தோல்வியைக் கண்டு அஞ்சி விடுபவரல்லர். முயற்சி திருவினையாக்குவதை அவர் தமது வாழ்க்கையில் கண்டறிந்தவர். எனவே ஐயங்காருக்கு அடுத்தாற்போல் தாமே தீர்மானம் அனுப்பி யிருப்பதால், ஐயங்காரின் தீர்மானத்தை ஆமோதிக்கும் உரிமையாவது தமக்கு அளிக்கவேண்டுமெனப் போராடி அவர் வெற்றியடைந்தார். அதன்பின், தீர்மானத்தை ஆமோதிக்கும் வாயிலாக, தாம் எழுதி வைத்திருந்த பிரசங்கம் முழுவதையும் படித்துவிட்டார்.

செட்டியார் மறுநாள் தபாலை ஆவலுடன் எதிர்பார்த்திருந்து, வந்ததும், பத்திரிகைகளை உடைத்துப் பிரித்துப் பார்த்தார். அந்தோ! அவர் ஏமாற்றத்தை என்னவென்று சொல்வது? ஒரு பத்திரிகையிலாவது இவருடைய பிரசங்கம் வெளியாகவில்லை. 'ஸ்ரீமான் சிவகுருநாதஞ் செட்டியார் தீர்மானத்தை ஆமோதித்தார்' என்ற பாடமே எல்லாப் பத்திரிகைகளிலும் காணப்பட்டது. செட்டியாரின் பிரசங்கத்தைப் பத்திரிகைகளுக்கு அனுப்பாமல் இருப்பதற்கு வேண்டிய வேலையை முன்னமேயே ஐயங்கார் செய்துவிட்டது, பாவம்! அவருக்குத் தெரியாது.

அவர் உலகிலுள்ள எல்லாரையும், கடவுளையும்கூடச் சேர்த்துத் திட்டிக் கொண்டிருக்கையில், காரியஸ்தர் வந்து சேர்ந்தார். அவர் கொண்டு வந்த செய்தி செட்டியாருக்கு ஓரளவு ஆறுதல் அளித்தது.

"சங்கதி கேட்டீர்களா? கவர்னர் துரை காலை ஏழு மணிக்குத்தான் ஸ்டேஷனுக்கு வரப்போகிறாராம். ஒன்பது மணிக்குப் பொய்கையாற்றுத் தேக்கத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டுவதற்குத் திட்டம் செய்யப்பட்டிருக்கிறதாம். சுமார் ஐம்பது மைல் இதற்கிடையில் பிரயாணம் செய்தாக வேண்டும். ஆதலால் நகரசபை உபசாரப் பத்திரத்தை, நகர மண்டபத்துக்கு வந்தோ அல்லது ரயில்வே ஸ்டேஷனிலேயோ பெற்றுக்கொள்வதற்கு நேரமில்லையாம். இச்செய்தி இப்போதுதான் கவர்னரின் அந்தரங்கக் காரியதரிசியிடமிருந்து வந்ததாம். தாங்கள் அத்தீர்மானத்தைப் பிரேரணை செய்யாததே நல்லதாகப் போயிற்று. இல்லாவிடில், இப்போது எவ்வளவு அவமானம் பாருங்கள்" என்றார் காரியஸ்தர்.

"ஆ! கூர்மாவதாரம் ஐயங்காருக்கு நன்றாய் வேண்டும். என்னை முந்திக் கொள்ளப் பார்த்தாரல்லவா?" என்று கூறி, செட்டியார் உவகையடைந்தார்.

"ஆனாலும், 20ஆம் தேதி காலையில் ஸ்டேஷனுக்குப் போகவேண்டுமல்லவா?" என்று காரியஸ்தர் கேட்டார்.

"சந்தேகமில்லாமல், மற்ற எல்லா ஏற்பாடுகளும் முன்னரே திட்டம் செய்துள்ள படி நடத்த வேண்டியதே."

(தொடரும்)

# தண்ணீர்த் தீ

காய்ந்த மட்டையைப்
பிய்க்கும்போது நிலைதவறி
வெளிச்சுவர் ஈட்டிக்கம்பி
என் விலாவில் குத்தியது கண்டு
உன் நெஞ்சு கிழிந்ததாகத் துடித்தாய்

பிறிதொரு முன்னிரவில்
சிறுநீரகப் பையில் கல்லடைத்து
வலி வாந்தியென
மருத்துவமனையில் நான்
மயங்கிக் கிடக்கையில்
செவிலி ஏதேதோ சொல்லியதில்
எகிறித் துடித்தது உன்னிதயம்

இதோ வருகிறேன் என
நீ போய்விட்டாய்

என் பிள்ளையின்
அதிர்ச்சித் தெளிய இன்னும்
எத்தனை வருஷம் ஆகுமோ?

என்னைத் தழுவிய
என் பிள்ளையைச் சுமந்த
தண்டுவடம் எரிந்து
சாம்பலாகிப் போனது

சுடும் எலும்புப் பொறுக்கி
ஊத்துவாரி குளத்தில்
கரைத்து முழுகையில்
பிடித்த நெருப்பிலும்

'எங்க அம்மா தூக்குல தொங்குறாங்க
யாராச்சும் வாங்களேன்' என
புலம்பும் மகளின் குரலிலும்

பிழம்பாய் எரிகிறேன்
அணையாமல்.



சிவராஜ்

தமிழ்சினிமாவில் ராசியில்லாத நடிகை என்று, ஒரு காலத்தில் முத்திரை குத்தப்பட்ட ப்ரியாமணி, இன்று தமிழ் சினிமாவுக்குத் தேசியவிருதைப் பெற்றுத் தந்திருக்கிறார். 'நினைத்தாலே இனிக்கும்' படத்தில் ப்ரிதிவிராஜுடன் போட்டி போட்டு நடித்துக்கொண்டிருந்தவரை ஃபோனில் மடக்கினோம்.

# இன்னொரு முகம் அழகு...

தேசிய விருது வாங்கினதால என்னோட இயல்பு மாறலை. நந்திதா தாஸ் மாதிரி சீரியஸ் கதாபாத்திரங்கள் மட்டும் பண்ணினா ஆடியன்ஸுக்கும் போரடிக்கும்; எனக்கும் போரடிக்கும். வருஷத்துல ஒரு படம் அதுமாதிரி அமையலாம். மத்தபடி 'மலைக்கோட்டை', 'தோட்டா' மாதிரியான படங்கள்ல தொடர்ந்து நடிப்பேன். அதுல எந்த மாற்றமும் இல்லை.

'மலைக்கோட்டை', 'தோட்டா' ரெண்டு படங்களும் நல்லாதானே ஓடுச்சு. அந்தப் படங்களால எனக்கு நஷ்டம் எதுவும் இல்லை. மத்த ஹீரோயின்ஸ் பண்றதைத்தானே நானும் பண்ணிவேன். அப்புறம் ஏன் என்னை மட்டும் எல்லோரும் கேள்வி கேக்கறாங்க? 'பருத்தி வீரன்' வெளியான பிறகு, 'மேடம், கிராமத்துப் பொண்ணா வர்றீங்க'ன்னு எத்தனை பேர் என்கிட்ட கதை சொல்ல வந்தாங்க தெரியுமா! ஒரேமாதிரி கதாபாத்திரங்கள்ல நடிக்கவா, நான் சினிமாவுக்கு வந்தேன்?

விருது கிடைக்கும்னு யாரும் ஆருடம் சொல்லலை. நடிப்புக்குப் பாராட்டு கிடைச்சது. ஆனா, அது தேசிய விருது வரைக்கும் போகும்னு நான் உள்பட யாரும் நம்பலை. 'பருத்தி வீரன் படத்தை நேஷனல் அவார்ட்டுக்கு அனுப்பறேன்'னு கார்த்தி என்கிட்ட சொன்னார். அப்போதுகூட விருது எனக்குக் கிடைக்கும்னு நான் எதிர்பார்க்கலை. அதிகபட்சமா என் நடிப்புக்கு ஃபிலிம்ஃபேர் விருது கிடைக்கும்னு நம்பினேன்.

என் முதல்பட விமர்சனத்திலேயே என்னை 'ஜிங்க்ஸ் ஆர்ட்டிஸ்ட்' அதாவது, ராசியில்லாத நடிகைன்னு சொன்னாங்க. சினிமாத்துறையில இருக்கறவங்களும் சொன்னாங்க. படம் வெற்றியடையணும்னுதான் எல்லோரும் சினிமாவுல நடிக்கறோம்.

ஆனா,
படம் ஓடலைன்னா
ஏன் பழியைத் தூக்கி
ஹீரோயின் மேல போடறீங்க?
என்னைப் படத்துக்கு புக்
பண்ண வந்தவங்களே,
தோல்விப்பட நாயகின்னு
தெரிஞ்சபிறகு பின்
வாங்கிட்டாங்க. ஒரு
கதாநாயகியை அவங்க நடிச்ச
வெற்றிப் படத்தை மட்டும்
வைச்சுப் பார்க்காதீங்க.
அவங்க திறமையைப்
பார்த்து மதிப்பிடுங்க.
சரி, 'பருத்திவீரன்' ஒரு
வருஷம் ஓடின படம்,
எனக்குத் தேசிய
விருதும் கிடைச்சிருக்கு.
ஆனாலும்,
இன்னைக்கு
வரைக்கும் தமிழ்ல
இருக்கற பெரிய
நடிகர்கள்கிட்டயிருந்து
எனக்கு அழைப்பு
வரலை. என்ன
தயக்கம்னு எனக்குப்
புரியலை.

ப்ளாக் படத்துல
ராணி முகர்ஜி செய்த
கதாபாத்திரத்தைப்
பார்த்து, நான்
ஏங்கினேன்.
படையப்பாவுல ரம்யா கிருஷ்ணன்
செஞ்சதும் ஒரு கனவு ரோல். என்ன
சொல்லுங்க... 'மூன்றாம் பிறை'
ஸ்ரீதேவி மாதிரி இன்னொரு கேரக்டர்
எங்களுக்கெல்லாம் கிடைக்குமா?
அடுத்ததா, 'நினைத்தாலே
இனிக்கும்'ங்கற
படத்தில் நடிச்சுட்டு
இருக்கேன். மலையாளப் படமான
கிளாஸ்மேட்டோட ரீமேக் இது.
இன்னொருமுறை தேசியவிருது
எனக்குக் கிடைக்குமான்னு தெரியலை.
ஆனா, முத்தழகுக்குச் சமமான
இன்னொரு கதாபாத்திரத்துல நான்
கட்டாயம் நடிப்பேன்''

## - ஆசைப்படும் ப்ரியாமணி

- செந்தில்



னத் தலைநகர் பீய்ஜிங்கில் ஆகஸ்ட் 8ல் தொடங்கவிருக்கிறது ஒலிம்பிக். போட்டிகளின் பின்னணியில் ஒலிக்கப்போகும் இசையை கம்போஸ் செய்து கொடுத்த சந்தோஷத்தில் இருக்கிறார் லேகா ரத்னகுமார். அவர் சென்னையைச் சேர்ந்த தமிழர் என்பது நமக்கெல்லாம் கூடுதல் சந்தோஷம். எப்படிக் கிடைத்தது இந்த வாய்ப்பு? அவரே சொல்கிறார்...

''நான் இசையமைத்த 'இன்றைய ஆசியா' என்ற குறுந்தகட்டின் மூன்று பகுதிகளும் ஒலிம்பிக் போட்டியில் இடம் பெறப்போகின்றன. லேகா சொனாட்டானின் மூலம் கிட்டத்தட்ட 70 லட்ச இசை ட்ராக்குகளை எங்களது லைப்ரரியில் வைத்துள்ளோம். அந்த இசை ட்ராக்குகளிலிருந்து நேஷனல் ஜியோகிரஃபிக் சேனல்களுக்கும், டிஸ்கவரி சேனல்களுக்கும் பின்னணி இசை பலவற்றையும் பயன்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். 'கிளவர் ஃபீல்டு' இன்று உலக நாடுகள் அனைத்தும் பார்த்து ரசிக்கக்கூடிய படம். அதிலும் எனது பின்னணி இசை இடம் பெற்று, New York Times, Hollywood.com-ன் celebrity column வரை பாராட்டியிருக்கின்றன'' என்கிறார்.

'சொனாட்டான் இசை லைப்ரரி'யின் பயணம், எங்கே, எப்படி, எப்பொழுது துவக்கப்பட்டது?

''1980ல் நான் தயாரித்த 'இருட்டில் ஒரு வானம்பாடி' என்ற தொலைக்காட்சி தொடர் பரவலான பாராட்டுக்களைப் பெற்றுத்தந்தது. அந்தத் தொடருக்காக பி.பி.சி.யிலிருந்து என்னைப் பேட்டி காண்பதற்காக அழைத்திருந்தனர். அந்தப் பேட்டியை முடித்துவிட்டு, நியூயார்க்கில் உள்ள எச்.பி.ஓ. ஸ்டுடியோவுக்கும், போஸ்ட் பெர்ஃபெக்ட் கம்பெனிக்கும் சென்று பார்த்தேன். சென்னையில், ஒவ்வொரு தொலைக்காட்சி தொடர் முடித்த பின்பும் அதற்கான பின்னணி இசையைச் சேர்க்க பல நாட்கள் நாம் எடுத்துக்கொண்டிருக்கிறோம். ஆனால், அங்கே சினிமாக்களுக்கும் சரி, தொலைக்காட்சி தொடர்களுக்கும் சரி, சொனாட்டான் மியூஸிக் லைப்ரரியிலிருந்து, சி.டி.க்களைத் தேர்ந்தெடுத்து, அந்தந்த ட்ராக்கைப் பயன்படுத்தி ரீ-ரிக்கார்டிங் வேலையை எளிமையாகப் பயன்படுத்துகிறார்கள். இந்தியாவிலும் இதைப் போன்ற ஒன்றை உருவாக்கிட வேண்டும் என்று அன்றே தீர்மானித்துக்கொண்டேன். நியூயார்க்கிலிருந்து ஜெர்மனியில் நடைபெற்ற ஃபோட்டோ கினா ஃபெஸ்டிவலில் பங்கு கொண்டேன். அங்கே சொனாட்டான் நிறுவனத்தின் பூத் பார்த்து, அவர்களிடம்


* ஒலிம்பிக் ஸ்டேடியம்

இதைப்பற்றி விசாரித்தேன். இந்த library-ஐப் பயன்படுத்திக் கொள்ள ஒரு வருட royaltyயாக 400 யு.எஸ். டாலர்கள் கொடுக்க வேண்டும் என்றார்கள். 1982-ல் அவர்கள் தந்த கலெக்ஷனிலிருந்து ஓர் இந்திய இசை தகட்டைப் போட்டுக் காண்பித்தார்கள். இது authentic Indian Music இல்லை என்று அவர்களிடம் சொன்னேன். 'சரி எங்களுக்குச் சரியான இந்திய இசையை நீயே தயாரித்துக் கொடுக்க முடியுமா?' என கேட்டார்கள். எனது முதல்



* 'க்ளோவர் ஃபீல்டு' படக்காட்சி



* லேகா ரத்னகுமார்

இசை தகடு சொனாட்டானில் இப்படித் தான் இடம் பிடித்தது. இந்தியாவின் மூலை முடுக்கெல்லாம் சென்று இந்திய இசையின் பல்வேறு பரிமாணங்களைப் பதிவுசெய்து 'Authentic India' 1,2,3,... என சி.டி.க்கள் தயார் செய்தேன். 1993-ல் இந்தியாவின் One and only Lekha Sonaton Music Library ஆரம்பமானது.

இந்த இசை 'நூலகத்தை' நம் இந்தியத் திரைப் படங்களில் பயன்படுத்திக்கொள்ள முடியுமா?

''தாராளமாகப் பயன்படுத்திக் கொள்ள லாம். 14 வருடங்களாக உலகத் திரைப் படங்கள் பலவற்றிலும் இதன் உதவியோடு, பின்னணி இசை திரைப்படக் காட்சிகளில் சேர்க்கப்பட்டிருக்கிறது. கதாநாயகி நிமிர்ந்து நேரே பார்ப்பதற்கும், கதாநாயகன் ஓடி வருவதற்கும்கூட பின்னணி இசை தேவைப் படுகிறதே! அதையெல்லாம் www.sonaton.com என்ற இணைய தளத்துக்குச் சென்று, பாஸ்வேர்ட் கொடுத்துவிட்டு, தங்களது காட்சிக்கேற்ற இசையைக் காதால் கேட்டு, பத்தே நிமிடங்களில் டவுன்லோட் செய்துவிடலாம். இது நிஜமாகவே தமிழ் மீடியாவுக்குக் கிடைத்த ஒரு மாபெரும் வரப்பிரசாதம்'' என்கிறார் லேகா ரத்னகுமார்.

* கம்போஸிங் ரூமில்...



# 'ஒலிம்பிக்'கில் தமிழரின் இசை!

– நளினி சம்பத்குமார்

# உழைப்பு, கௌரவம், வெற்றி!

உக்கடம் பேருந்து நிலையம். பிரியாணி மாஸ்டர் மதனா வீடு எங்க இருக்குன்னு கேட்டால், அடையாளம் சொல்கின்றனர் அத்தனை கடைக்காரர்களும். கோவை மாநகரில் திருநங்கை மதனா அத்தனை பிரபலம்.

அவருக்குக் கீழே பதினைந்து திருநங்கைகள். சமையல் காண்ட்ராக்ட் எடுத்து, அனைவருக்கும் வேலை தந்து வருகிறார் மதனா. அதுவும் அசைவ சமையலில் அவரது குழு நம்பர் ஒன். அசைவம், சைவம் இரண்டிலும் அந்தத் திருநங்கைகள் சளைத்தவர்கள் அல்ல என்பது நம்ப வேண்டிய ஆச்சர்யம்.

''கோவைதான் எனக்குப் பூர்வீகம். பொதுவாகவே எங்களைப் போன்றவர்கள் பதினாறு அல்லது பதினெட்டு வயதுகளில் வீட்டைவிட்டு வெளியே கிளம்பிவிடுவார்கள். வீட்டில் அவர்களை வைத்துக் கொள்ளமாட்டார்கள் என்பதும் மற்றொரு காரணம். பெங்களூர், மும்பை, கல்கத்தா, டெல்லி என்று பல நகரங்களிலும் எங்கள் ஆட்களுடன் போய்ச் சேர்ந்துகொள்வோம். நான் கோவை வந்து பத்து வருடங்கள் ஆகின்றன. மதனா எனும் ஆலமரத்தின் கீழ், மற்ற திருநங்கைகள் பாதுகாப்பாகவும் செழிப்பாகவும் வாழ்ந்து வருகிறோம்!'' என்கிறார் திருநங்கை நூரி.

திருமண விருந்து, வரவேற்பு, காதணி விழா மற்றும் கோயிலில் கிடா வெட்டுதல்... போன்ற நிகழ்ச்சிகளுக்கு அசைவ உணவு ஆர்டர்கள் வந்து குவிகின்றன. ஆர்டருக்குத் தகுந்தாற்போல மூன்று நபர்களோ அல்லது நான்கைந்து நபர்களோ சமையல் செய்ய அனுப்பி வைக்கப்படுகின்றனர். வரும் வருவாயைக் குறிப்பிட்ட வேலையில் ஈடுபடும் ஒவ்வொருவரும் பிரித்துக்கொள்கின்றனர். வெளியூர்களில் இருக்கும் தங்கள் பெற்றோர்களையும், உடன் பிறந்தவர்களையும்கூட, இந்த வருமானத்தின் உதவியுடன் நல்லபடியாகக் கவனித்து வருகின்றனர்.

''கோவையில் பிறந்த எனக்கு நாலாம் வகுப்பு வரைதான் பள்ளிப் படிப்பு. பிறகு வீடுகளில் வேலைக்குச் சேர்த்துவிட்டார்கள். அங்கும் எனக்குத் தொந்தரவுகள் தொடர்ந்தன. வறுமையால் அவற்றைப் பொறுத்துக்கொண்டேன். பின்னர் ஒண்டிப்புதூரில் ஒரு வீட்டில், எட்டு வருடங்கள் சமையல் வேலை செய்தேன். அவங்க தந்த சம்பளம் பத்தலை. அதனால் மதனாவிடம் வந்து சேர்ந்தேன். இப்ப எனக்கு நல்ல சம்பளம் கெடைக்குது. பிறந்த வீட்டுச் செலவுக்கும் பணம் தர்றேன். சமூ



✱ மனோ

✱ நூரி



**இப்ப இந்த ஏரியாவுலேயே ரெண்டுமாடி கொண்ட வீட்டைச் சொந்தமாகக் கட்டிக் குடியிருக்கோம்**

✱ சொந்த வீட்டில் 'மதனா' குழுவினர்

சுத்திலும் எங்களுக்குன்னு நல்ல மதிப்பு மரியாதை கெடைக்குது. இது போதும்!'' என்கிறார் திரு நங்கை மனோ.

''**எ**னக்கும் மதனாவுக்கும் சொந்த ஊர் தஞ்சாவூர் மானம்புச்சாவடி. அடுத்தடுத்த தெரு. அஞ்சாங்கிளாஸ் வரைக்கும் ரெண்டு பேரும் ஒண்ணா படிச்சோம். பிறகு நான் மட்டும் பதினொண்ணாவது வரைக்கும் படிச்சேன். ஸ்கூல்ல பையன்ங்க, வாத்தி யாருங்ககூட என்னைக் கேவலமாத்தான் கூப்பிடுவாங்க. அப்புறம் பதினெட்டு வய சுல மும்பை போய்ட்டேன். 'பதாய்'ஆக இருந்தேன். 'பதாய்'னா சேட்டுங்க, பெரிய பணக்காரங்க வீட்ல விசேஷங்களுக்குப் போயி டான்ஸ் ஆடறது. கடை திறப்பு, கல்யாணம், பிறந்த நாள் விழாவுலயும் ஆடுவேன். மதனா குரூப்ல சேர்ந்த பிறகு தொந்தரவும், அவமானமும் இல்லாம நிம்மதியா வாழ முடியுது!'' என்கிறார் திருநங்கை ஜானகி.

''**உ**க்கடம் ஏரியாவுல வாடகைக்கு வீடு கேட்டப்ப, எங்களுக்கு வீடு தர யாரும் முன் வரலை. நல்லவர் ஒருத்தர், அந்த நேரத்துல துணிச்சலா எங்களுக்கு வீடு தந்தார். அப்பவும் ஏரியா ஆளுங்க, ரொம்ப இம்சை தந்தாங்க. நாங்க எதுக்கும் பயப்படலே. சமையல் காண்ட்ராக்ட் எடுத்து, எல்லாரும் ரொம்பக் கடுமையா உழைச்சோம். இப்ப இந்த ஏரியாவுலேயே ரெண்டு மாடி கொண்ட வீட்டைச் சொந்தமாக் கட்டிக் குடியிருக்கோம். சமையலுக்குப் போய்ட்டு வர்ற எங்க ஆளுங்க இங்கதான் தங்கிக்கறாங்க. யார்கிட்டேயும் கையேந்தக் கூடாது. வேஷம் போட்டுக்கிட்டுப் பிச்சை எடுக்கக்கூடாது. பாலியல் வக்கிர அழைப்புகளுக்கும் சம்மதிக்கக் கூடாது. இதெல்லாம்தான் என்னோட கண்டிஷன். ஆரம்பத்துல ஏரியாவுல இருந்த எதிர்ப்பு, நாங்க நடந்துக்கற விதத்தைப் பார்த்துட்டு மறைஞ்சு போயிடுச்சு! வாய்க்கு ருசியா, வயிறா ரச் சமைச்சுத் தர்றதுல எங்களுக்கும் ரொம்ப திருப்தி'' என்று பெருமிதப் படுகிறார் மதனா.

*செய்தியும், சித்திரங்களும் :*

**ஸ்ரீரங்கம் திருநாவு**



## ❖ 29.06.2008 முதல 05.07.2008 வரை ❖



**மேஷம்:** துணிச்சலோடு செயல்படும் மேஷ ராசிக் காரர்களே... வெளிநாட்டி லிருந்து நல்ல தகவல் வந்து சேருமுங்க. பூர்வீக சொத்து பிரச்னை தீர்ந்து போகும். தொழில் செய்ய உதவிங்க கிடைக்குமுங்க. அடிக்கடி மன உளைச்சல் ஏற்பட் டாலும் நன்மைக்குக் குறைவு இருக்காதுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நல்ல பலன்களை அளிக்கு முங்க.



**ரிஷபம்:** பேச்சுவன்மை மிக்க ரிஷபராசிக்காரர் களே... அதிக மதிப்பெண் கள் பெறுவீங்க. வருவாய் பெருகுமுங்க. புதிய வேலைவாய்ப்புங்க தேடி வரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். புதிய தொழில் தொடங்கப் போறீங்க. நாணயமாக நடந் துக்குவீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மை யளிக்குமுங்க.







**மிதுனம்:** பழகுவதற்கு இனிமையான மிதுன ராசிக்காரர் களே... வாழ்க்கை இனிமையாக இருக்கும். வசதிவாய்ப்புகள் பெருகப்போவுது. வேலையில் சுமை இருக்காது. வியாபாரம் சூடுபிடிக்கும். குரு / சனி வழி பாடு நன்மையை அதிகப்படுத்தும்.

**கடகம்:** கண்டிப்பும் பாசமும் சரிவிகித கலவையான கடக ராசிக்காரர் களே...சுபகாரியங்கள் தடையில்லாம நடைபெறப் போகுது. வாக்கு மேன் மையை அடையும். வேலையும் கொஞ்சம் அதிகரிக்குமுங்க. கைப் பொருள் மீது கவனமா இருங்க. ராகு / கேது வழிபாடு நன்மையளிக்குமுங்க.

**சிம்மம்:** தளராத மனமுதிர்ச்சி கொண்ட சிம்ம ராசிக்காரர்களே... வேலையில சுமை அதிகமாகும். குடும்ப வாழ்க்கையில விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. மறைமுக எதிர்ப்பு களும் இருக்கும். உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில் இருக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மை தரும்.

**கன்னி:** கண்ணியமிக்க கன்னிராசிக் காரர்களே... இந்த வாரம் சிறப்பாக அமையுமுங்க. வியாபாரம் ஜோரா இருக்கும். குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. ஆடை ஆபரணங்கள் வாங்கிக் குவிப்பீங்க. வெளிநாடு போற வாய்ப்பு வரும்ங்க. ஆஞ்சநேயர் வழி பாடு நன்மையைத் தருமுங்க.

**துலாம்:** விவேகம் நிறைந்த துலா ராசிக்காரர்களே... குடும்பச் சொத்துல இருந்து வந்த பிரச்னைங்க முடிவுக்கு வரும். சுபச்செலவுகள் உண்டுங்க. கடன் தொல்லைங்க முடிவுக்கு வருமுங்க. வியாபாரம் நல்லபடியா போகும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு

# நடக்குமென்பார்;

நன்மையைத் தருமுங்க.

**விருச்சிகம்:** நகைச்சுவையுடன் பேசும் விருச்சிக ராசிக்காரர்களே... உத்தியோக இடமாற்றம் உண்டுங்க. குடும்பத்துல பிரச்னைகள் இருக்காது. கல்வியில் நல்ல முன்னேற்றம் காண லாம். வேலைப்பளு அதிகமாகும். திருமண பாக்கியம் உண்டாகப் போகுது. நண்பர்கள் தேடி வந்து உதவுவாங்க.

**தனுசு:** புண்ணியப் பயணம் மேற் கொள்வதில் மிகுந்த ஆர்வம்கொண்ட தனுசு ராசிக்காரர்களே... தடைப்பட்ட காரியங்கள் மளமளன்னு நடக்கப் போவுது. குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. உல்லாசப் பயணம் போவீங்க. கடன் தொல்லைங்க இருக் காது. பணம் பல வகையில வருமுங்க. ஆஞ்சநேயர் வழிபாடு நன்மையை அதி கப்படுத்துமுங்க.

**மகரம்:** தெய்வ நம்பிக்கை யோடு காரியங்களில் ஈடுபடும் மகர ராசிக்காரர்களே... உத்தியோகத்துல நல்ல பெயர் வாங்குவீங்க. கடன் பாக்கிகள் வசூ

'முனியாண்டி விலங்கியல் மூன்றாமாண்டு' படத்துல நான் பாஸ் பண்ணிடுவேனான்னு கொஞ்சம் பாத்துச் சொல்லுங்க சார்...

# தஞ்சை பரத்வாஜ்

லாகும். நண்பர்கள் உதவி செய் வாங்க. சாப்பாட்டு விஷயத்துல கவ னமா இருங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மையைத் தரு முங்க.

**கும்பம்:** விரைந்து முடி வெடுக்கும் கும்பராசிக் காரர்களே... மனத்தில் இருந்த குழப்பங்கள் தீரு முங்க. ஆரோக்கியம் நல்ல படியாக இருக்கும். பிரிந்த குடும்பம் ஒண்ணு சேரும். தொழில்ல நல்ல ஏற்றம் இருக்குமுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மை யைத் தருமுங்க.

**மீனம்:** எதிரிகளையும் நண்பர்களாக்கும் மீனராசிக் காரர்களே... ரொம்ப அரு மையான வாரமுங்க. நீங்க தொட்டால் மண்கூடப் பொன்னாகுமுங்க. வியா பாரத்துல நல்ல முன்னேற் றம் இருக்குமுங்க! சனீஸ் வர வழிபாடு நன்மை யளிக்குமுங்க.








# நடக்கும்!

## ஜாலி ஸ்டோர்ஸ்

# கூட்டணி வே

(விஜயகாந்த் கட்சி அலுவலகம். விஜயகாந்த், சரத்குமார், டி.ராஜேந்தர் மூவரும், அவரவர் மனைவியரோடு உள்ளே வருகின்றனர். தொண்டர்கள் கோஷம் போடுகின்றனர்.)

**விஜயகாந்த் தொண்டர்கள்:** நிகழ்கால நெல்சன் மண்டேலா... வாழ்க... வாழ்க...

**சரத்குமார் தொண்டர்கள்:** நிகழ்கால சுபாஷ் சந்திரபோஸ்... வாழ்க... வாழ்க...

**டி..ஆர்:** (அவருக்குக் கோஷம்போட ஆள் இல்லாததால் அவரே குரல் கொடுக்கிறார்) நிகழ்கால பிடல்காஸ்ட்ரோ... வருங்கால வாஸ்கோடகாமா... வாழ்க... வாழ்க...

(மூவரும் எதிரெதிரே அமர்ந்திருக்கின்றனர்)

**விஜயகாந்த்:** நாம எதுக்காகக் கூடியிருக்கோம்னா, தத்தளிச்சிக்கிட்டு இருக்கற தமிழ்நாட்டைக் கைப்பிடிச்சுத் தூக்கிக் கரையேத்தணும். அதுக்காக நாம கூட்டணி சேர்ந்தாதான் முடியும்னு பிரேமலதா சொல்லிச்சு.

**சரத்குமார்:** அதுக்காக என் உயிரையும் கொடுக்கத் தயார். என்னோட கோடான கோடி ரசிகர்களும் தயார்.

**டி..ஆர்:** (எழுந்து நின்று, ஆக்ஷனுடன்) நம்மோட கூட்டு, எதிரிக்கெல்லாம் வேட்டு; ஜனங்களைப் பாத்து, கேட்டுக்கலாம் ஓட்டு.

**ராதிகா:** (சரத்குமார் காதில்) என்னங்க இவரு அடுக்கு மொழியில 'அ'வுக்கு அ... 'கா'வுக்கு கா... போட்டுப் பேச ஆரம்பிச்சுட்டார்; நீங்களும் பேசி அசத்துங்க.

**சரத்குமார்:** எனக்குத் தெரியாதும்மா... வேணும்னா 'நாட்டாமை' படத்துல வர்ற டயலாக்கைப் பேசட்டுமா?

**பிரேமலதா:** (விஜயகாந்த் காதில்) இந்தக் கூட்டணிக்கு நீங்கதான் தலைவர்னு மெட்டருக்கு வாங்க.

■ உத்தமபுத்திரன் ■

எழுதிக் கொடுத்த பேப்பரைக் கொண்டு வந்திருக்கீங்கதானே?

**விஜயகாந்த்:** பத்திரமா இருக்கு. ம்... முதல்ல நம்ம கூட்டணிக்கு ஒரு தலைவர் வேணும். என் உயிருக்கும் மேலான பிரேமலதா... ஸாரி... தொண்டர்களின் முடிவுப் படி, நானே தலைவரா இருந்திடறேன்.

**உஷா:** அதெல்லாம் முடியாது. என் வீட்டுக்காரர்தான் இருக்கணும். உங்கம்மா உங்களைக் குழந்தையாத்தான் பெத்தாங்க. ஆனா, என் புருஷனை அவங்கம்மா தலைவராவே பெத்தாங்க. அதுவுமில்லாம ஆளில்லாத கட்சியையே அழகா வழி நடத்தத் தெரிஞ்சவர் அவர்.

**சரத்குமார்:** ஆரம்பத்துலயே சண்டை வேணாம். மக்கள் முன்னாடி என்னென்ன திட்டங்களை முன் வைக்கப் போறோம்னு முதல்ல பேசுங்க.

**டி.ஆர்:** அதுவும் சரிதான். ஏறிப்போச்சி விலைவாசி; பத்து ரூபாய்க்குக் கால்கிலோ அரிசி; தமிழ்நாடு நொடிஞ்சி போச்சி; ஏழை ஜனமே நீ இதை யோசி.

**விஜயகாந்த்:** அதோட மட்டும் இல்லாம, ஒவ்வொரு





வீட்டுக்கும் தேவையான உப்பு, புளி, மிளகா எல்லாம் பொட்டலம் கட்டி அவங்கவங்க சமையல் அறையில போட்டுடலாம்.

**சரத்குமார்:** எனக்கென்னவோ... வாரத்துக்கு ஒரு நாள் உப்புமா, மறுநாள் இட்லி... என் ஐடியா எப்படி?

**டி.ஆர்:** *(தலையைக் கோதியபடி)* உப்புமா பத்துமா? தொண்டையில சிக்குமா? குழந்தைங்க தின்னுட்டுத் துப்புமா?

**சரத்குமார்:** கண்டிப்பா உப்புமா பத்தும். ஏன்னா, இட்லி மீதியானா மறுநாள் இட்லி உப்புமா செஞ்சு போடலாம். 'சூர்யவம்சம்' படத்துல அப்படித்தான் அசத்தினோம்.

**டி.ஆர்:** *(சட்டென எழுந்து)* தமிழன் தண்ணிக்கு அலையறான் நாயா; அடுத்த நாட்டுக்காரன் நீரைக் கட்டிக்காக்கறான் பேயா; இங்க அரசியல் தலைவன் இருக்கறான் ஹாய்யா; அதுக்குத் தீர்வு என்னய்யா?

**விஜயகாந்த்:** ஒக்கேனக்கல்ல கொட்டுற நீர்வீழ்ச்சியோட எண்ணிக்கை 87. அந்தத் தண்ணீர் வர்ற வழியில இருக்கற பெரிய குழிகள் மட்டும் 160. குண்டும் குழியுமான பள்ளம்...



**சரத்குமார்:** *(குறுக்கிட்டு)* கேப்டன், உங்க கால்குலேட்டரைக் கொஞ்சம் ஆஃப் பண்ணி வைங்க. அடுத்த எலக்ஷனுக்கு ஏதாச்சும் முடிவு எடுப்போம்.

**விஜயகாந்த்:** சரி கேட்டுக்குங்க... பெட்ரோல் பங்க்குல பெட்ரோல் இலவசம். மளிகைக் கடையில மளிகை இலவசம்.

**சரத்குமார்:** பள்ளிக்கூடத்துல படிப்பு இலவசம். சினிமா தியேட்டர்ல டிக்கெட் இலவசம்...

**ராதிகா:** *(குறுக்கிட்டு)* டிக்கெட் இலவசம் மட்டும் வேணாம். அப்புறம் நமக்கு எப்படித் துட்டு வரும்?

**பிரேமலதா:** எல்லாம் சரி... யாரு முதல்வர்? அதைத் தீர்மானிங்க.

**ராதிகா:** என் வீட்டுக்காரர்தான் பஞ்சாயத்து பண்றதுல கில்லாடி. அதனால அவரே இருக்கட்டும்.

**பிரேமலதா :** *(கோபமுடன்)* இல்ல, எம் புருஷன்தான் கேப்டன். தமிழ்நாடுங்கிற கப்பலைக் கவிழ்க்காம கரை சேர்ப்பாரு.

**உஷா :** அப்படின்னா... சொந்தமாவோ... வாடகைக்கோ ஒரு கப்பல் வாங்கிக் கொடுங்க... ஓட்டட்டும். *(இப்படியே அவரவரின் கணவர்களுக்கு ஆதரவாக மூன்று பெண்களும் ஆவேசமாக சண்டைபோட, ஒரே கூச்சல் குழப்பமாக இருக்கிறது)*

**பிரேமலதா :** *(கேப்டனிடம்)* 'என் தாய்நாட்டை விட்டுக் கொடுக்க மாட்டேன்'னு பல்லைக் கடிச்சு டயலாக் பேசிட்டு வாங்க... போலாம்...

**உஷா:** என்னங்க... உடனே என்கூட கிளம்புங்க... அடுத்த படத்துக்குப் பணம் தர்றேன். நீங்க தனியா நின்னாலே ஒன்றரை லட்சம் வோட்டுல 87 தொகுதியில ஜெயிப்பீங்க.

**ராதிகா:** எந்திரிங்க... சரத்... மொத்த தமிழ்நாடும் உங்க கையில இருக்கறதைப் புரியாம பேசறாங்க.

*(மூன்று ஜோடிகளும் வந்த வேகத்தில் வெளியேறுகின்றனர்!)*




ஒரு பக்கத் தொடர்

# புள்ளிகள்... கோலங்கள்...

படுதலம் சுகுமாரன்

**ப**க்கத்து வீட்டுச் சிறுவர்கள், அட்டைக் கத்தியை வைத்துக்கொண்டு சண்டை போட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

''டேய்... நான் உன்னை 'சதக், சதக்'னு வெட்டப் போறேன்டா...''

''நான் உன்னை 'சதக், சதக்'குனு குத்துவேன்டா பார்க்கலாமா...?''

கந்தசாமி, சைக்கிளை ஸ்டாண்டிட்டுவிட்டுப் போய் அந்தச் சிறுவர்களிடமிருந்து கத்திகளைப் பறித்தெறிந்து விட்டு, தலா ஒரு அடி கொடுத்து அவர்களை விரட்டினான்.

எரிச்சலுடன் சைக்கிளை மிதித்தான்.

டீக்கடையைப் பார்த்ததும், சைக்கிள் வேகம் குறைந்தது. ஒரு டீ சாப்பிடலாம் போலிருந்தது.

சொன்னான்.

பேப்பரை மேய்ந்தபடியே டீ குடித்துக் கொண்டிருந்த ஓர் ஆள்,

''இதப் பாருய்யா... 'மனைவியை அனுப்பி வைக்க மறுத்த மாமியாருக்குக் கத்திக்குத்து, மருமகன் ஆத்திரம்' பலே ஆள்தான்...'' என்று சிரிக்க, கந்தசாமி சண்டைக்குப் போனான்.

''என்னைப் பார்த்து ஏன்யா சிரிக்கற... நானாய்யா மாமியாரைக் குத்தினேன்? முழியை நோண்டிடுவேன் ஆமா...'' என்று பாய்ந்தான்.

நாலு பேர் பிரயத்தனப்பட்டு விலக்கி வைத்தார்கள். அந்த நேரம் பார்த்து...

''கத்தி... கத்திரிக்கோல் சாண புடிக்கறதே...ய்'' என்று கூவிக் கொண்டு ஒருவன் தெருவழியே போக...

கந்தசாமிக்குப் பைத்தியம் பிடிக்கும் போல இருந்தது.

சைக்கிளை உருட்டிக்கொண்டு ஓடினான்.

''சார்... என்னைக் கைது பண்ணுங்க சார். நான்தான் எஜமானைக் கொன்னேன்.... கத்தியால் குத்தி நான்தான் கொலை செய்தேன்...''

கதறியபடி போலீஸ் ஸ்டேஷனுக்குள் நுழைந்தான்.

''ஏன்?'' - கேள்வி கேட்டது போலீஸ்.

''நான் நல்லவன்ங்க. என்னை முதலாளிதான் கொலைகாரனாக் கிட்டாரு.''

''புரியற மாதிரி சொல்லு.''

(தொடரும்)

"என் நெஞ்சில் பூட்டி வைத்திருக்கும் ஒரு ரகசியத்தை உன்னிடம் சொல்லத் துடிக்கறேன்டா... ஆனா முடியல."

"ஏன்டா முடியல?"

"சாவியை எங்கோ தொலைச்சுட்டேனே!"

- என்.எஸ்.பாலசுப்பிரமணியன்





"தஞ்சாவூர் பொம்மை எப்படிம்மா தலையாட்டுது?"

"உங்க அப்பாகிட்டே கேளுடா"

- மா.கண்ணன்

"சாணை பிடிக்கும்போது அந்த ஆளிடம் 'வெட்டி அரட்டை' அடிச்சியா?"

"ஏன் மன்னா?"

"என் உடைவாளை 'பிச்சுவா' சைஸுக்கு ஆக்கிவிட்டானே!"

- வெ.சீதாராமன்





"என்கிட்டே தனியா ஏதோ கேக்கணும்னீங்களே... கேளுங்க."

"கூச்சமா இருக்குது... இன்னொரு காஃபி கிடைக்குமா?"

- சீதா

# சபாஷ், சரியான ஜோடி!



''நேற்று 'ஜோடிப் பொருத்தம்' நிகழ்ச்சிக்குப் போயிருந்தபோது, ஸ்டுடியோவிலேயே, எனக்கும் என் கணவருக்கும் 'பெரிய சண்டை!'''

''அப்புறம்?''

''சரியான ஜோடி நீங்கதான்னு, எங்களையே தேர்ந்தெடுத்துட்டாங்க!''

– அனன்யா

''நம்ம குழந்தைக்கு என் அம்மா பேரை வைக்கலாமா, இல்ல, உன் அம்மா பேரை வைக்கலாமா?''

''உங்கம்மா பேரையே வைங்க, பிற்காலத்தில இவளைப் 'பேர்' சொல்லித் திட்ட எனக்குச் சௌகர்யமா இருக்கும்!''

– வெ.சீதாராமன்





''அமைச்சரே, மகாராணி சொன்னதைக் கேட்டிருந்தால் இப்படி நடந்திருக்காது!''

''மகாராணி அப்படி என்ன சொன்னார்கள்?''

''யாருக்குத் தெரியும்? நான்தான் கேட்கவே இல்லையே!''

– ஜி.லட்சுமிபதி

**சுப்ரபாரதி மணியன்**

# காது

ஏதோ நினைவில் வலது காதை நீவிக் கொண்டிருந்தேன். காதை நீவ நீவ சுறுசுறுப்பாகும் என்று யாரோ சொன்னது ஞாபகம் வந்தது. காதைக் கிள்ளிச் சுறுசுறுப்பாக்குகிற வாத்தியார் இப்போது இல்லாமல் போய்விட்டார். வலது காதிலிருந்து கையை எடுத்த போது அருண் வந்து நின்றான்.

"காதையே தடவிக்கிட்டிருக்கீங்களேப்பா. ரிங் போட ஆசையா என்ன...?" அவனின் கேள்வி புரியாமல் பார்த்தேன். அவனின் இடது காதில் ஏதோ மாற்றம் இருப்பதுபோலத் தோன்றியது. அட... ரிங் ஒன்றை மாட்டிக்கொண்டிருக்கிறானே!

"என்ன இது, புதுசா ரிங்..."

"ஃபேஷன்ப்பா. இந்த ரிங்கை வலது காதுல போடறதா, இடது காதுல போடறதான்னு கொழம்பி, கடைசியில இடது காதுல போட்டுட்டேன். உங்களுக்கும் இடதுதானே புடிக்கும். நீங்க எப்பவும் லெஃப்டிஸ்ட்தானே?"

"தங்கமாடா...?"

"தங்கத்திலே போடற அளவுக்கு நீங்க பாக்கெட் பணம் குடுக்கறீங்களா...? சாதாரண கவரிங்தான். வெள்ளியாச்சும் போடணும். எங்க காலேஜ்ல காதுல ரிங் போடறவங்கன்னு ஒரு க்ளப் ஆரம்பிச்சிருக்காங்க. அதன் பலன், பிரயோஜனம், அக்குபங்சர் எஃபக்ட்ன்னு ஒரே லெக்சர் வேறெ..."

நான் என் வலது காதில் கைவைத்து நீவிப் பார்த்துக்கொண்டேன். சின்ன வயதில் காது குத்தின அடையாளம் முழுக்க மறைந்து போய்விட்டது. அருணுக்குச் சின்னவயதில் மொட்டை போட்டு காது குத்துவதில் அக்கறையாக இருந்தாள் கண்மணி. அது மறைந்து போயிருக்கும் அவனுக்கும்; இப்போது ரிங் குத்திக்கொண்டிருப்பது மட்டும் இனியும் ஞாபகத்தில் இருக்கும். காது குத்திக்கொள்ளாதவர்களைச் சுடுகாட்டுக் குழியில் இறக்கும்போது, சுடலைமாடன் அனுமதிக்க மறுப்பான். 'காதுகுத்தாத உடம்புகளா... ஒரு நிமிஷம்' என்று, ஏதோ ஆணியையாவது எடுத்து வந்து காதில் ஓட்டைகளைப் போட்டு பிணத்தைக் குழிக்குள் வைப்பான். பாட்டி காது வளர்த்து தண்டட்டி போட்டிருந்தது ஞாபகம் வந்தது.

சின்னக் குழந்தைகளோ, புதியவர்களோ பாட்டியின் தண்டட்டியைப் பார்த்து ஆச்சர்யப்படாமல் இருக்க மாட்டார்கள்.

"காது குத்தி காது வளர்க்கறதே..." என்று சப்தம் போட்டுக்கொண்டு கிராமவீதிகளில் பாட்டி செல்லும்போது, பல நாட்கள் அவளுடன் போயிருக்கிறேன். காதுகுத்தி கெடாவெட்டும் விசேஷங்களில் பாட்டிக்கு மரியாதை இருந்திருக்கிறது. பாட்டியின் சத்தம் கேட்டு, வீட்டுப் பெண்கள் வாசலில் வந்து நிற்பார்கள். 'அடுத்த வாரம் வர்றியா?' என்று கேட்பார்கள்.

தேவகி, என்னோடு இரண்டாம் வகுப்பு படித்தவள். அவளுக்குக் காதுகுத்தி விட பாட்டியோடு சென்றது ஞாபகம் இருக்கிறது. வீட்டின் பின்புறம் எங்களை வரச் சொன்னார்கள். நான் ஒரு வகையில் திகைப்புடன் நின்றுகொண்டிருந்தேன். "இவங்கெல்லாம் மேல்சாதிக்காரங்க. இவங்க வூட்டுக்குள்ள வுடமாட்டாங்க. இங்க உக்கார வெச்சுதா குத்தணும்". தேவகி உடம்பில் துணியில்லாத மாதிரி ஒரு வெள்ளை வேஷ்டியை அவள் மேல் போர்த்தியிருந்தார்கள். விடுக்கென பாட்டி காது குத்தியபோது, அலறினாள். அவளின் வாயில் யாரோ லட்டோ, ஜிலேபியோ திணித்தார்கள். கண்களில் நீர் வழிய அவள் அதைச் சாப்பிட்டபடியே வலியைப் பொறுக்க முடியாமல் கத்திக் கொண்டிருந்தாள். காதுகுத்தி முடித்தபின் குளிக்கச் செய்து வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்கள். அவளின் காதில் மாட்டின தோட்டில் நட்சத்திர



# வளர்த்தல்!

டிசைன் மினுங்கிக் கொண்டிருந்தது. அடுத்த வாரம் தேவகி வீட்டுக்குப் போகலாம் என்று பாட்டி கூட்டிக்கொண்டு போயிருந்தாள். கம்மலைக் கழட்ட தேவகிக்கு மனசில்லை. கம்மலைக் கழட்டிவிட்டு உரித்த சோளத் தட்டையைத் திரித்து சிறு தண்டு மாதிரியாக்கி, அந்த ஓட்டையில் திணித்தாள். தினமும் சோளத்தட்டையைத் தண்ணீர் விட்டு நனைத்தபடி இருக்கச் சொல்லிவிட்டு

வந்தோம்.

இன்னொரு பத்துநாள் கழித்துப் போனோம். இம்முறை சோளத்தட்டை எடுத்துவிட்டு, பனை ஓலையை மடிப்பு மடிப்பாகச் சுருட்டிக் காது ஓட்டைக்குள் திணித்தாள். கொஞ்ச நாட்களில் காது ஓட்டை பெரிதாகிவிட்டது. அடுத்த வாரம் போனபோது 'குறுக்கை' மாட்டிவிட்டாள். காது நன்கு கீழ் இழுத்துத் தொங்கின பின்பு, 'குறுக்கை'யைக் கழட்டிவிட்டு தங்கத்தில் செய்திருந்த தண்டட்டியை மாட்டி விட்டாள்.

தேவகியைத் தொங்கும் காதுகளுடனும், தண்டட்டியுடனும் பார்க்க அழகாக இருக்கும். ரொம்ப வருடங்கள் கழித்து தேவகியை சென்னையில் பார்த்தபோது ரொம்பவும் மாறிப்போயிருந்தாள். காது வளர்ந்து தொங்கிக் கொண்டிருக்கிற தண்டட்டியுடன் சவுரி வைத்து தலைமுடியைக் கொண்டையாக்கி கிராமத்துப் பெண்ணாகியிருந்தாள். ''என்ன எதுவரைக்கும் படிச்சே? நாம ஸ்கூல் போனப்புறம்.''

''எங்க படிக்கிறது? இந்தத் தண்டட்டியும், காதும், கொண்டையும் வெச்சுட்டு கிராமத்தை வுட்டு படிப்புக்குன்னுதா போக முடியுமா...?'' என்றாள்.

பாட்டி காது வளர்க்கக் கேட்டு கூவிக்கொண்டு போகும்போது பின்னப்பட்ட மூங்கில் கூடைகளை வைத்திருப்பாள். கூடைகள் எப்படியும் ஒன்றிரண்டு விற்கும். காது வளர்ப்பதற்குக் கூலியாக கம்பு, சோளம், பழைய துணியெல்லாம் கிடைக்கறபோது வாங்கி வருவாள். நான் முதன் முதலில் போட்ட பேன்ட், அப்படி பழைய துணியில் வந்ததுதான்.

சிவகாமி விஷயத்தில் பாட்டிக்குச் சங்கடமாகிவிட்டது. எல்லாம் சரியாகத்தான் செய்ததாகப் பாட்டி சொன்னாள். ஆனால், சிவகாமிக்குக் காது புண்ணாகி விட்டது. ஊரே கூடி மொய்ப்பதுபோல ஒருநாள் பாட்டியைச் சுற்றி நின்று கொண்டார்கள். நானும் பாட்டியின் சேலையைப் பிடித்தபடி ஒண்டிக்கொண்டு நின்றேன். ''நல்லவேளை நீ கூட இருந்தே அப்பு... இல்லீன்னா, இவ செஞ்ச லட்சணத்தைப் பாருன்னு ஆளாளுக்கு மூஞ்சியில இடிப்பாளுக.'' சிவகாமியின் காதுப் புண் ஆறுவதற்கு, பாட்டிதான் வைத்தியம் செய்தாள். குறுமிளகை வெள்ளைத் துணியால் கட்டி மண்ணெண்ணெய் விளக்கில் விட்டாள். அதைத் தூளாக்கி, தேங்காய் எண்ணெயில் குழைத்து புண் இருக்கிற இடத்தில் பத்து போட்டாள். அதுவும் சரியாகாமல் ஈரம் பூத்து புண் மினுங்கிக் கொண்டிருந்தது. குறுமிளகைப் பச்சையாய் அரைத்துப் பத்து போட்டாள். தூங்கி எழுந்ததும் முதல் வேலையாக முகம்கூடக் கழு



''அரசே... அண்டை நாட்டு மன்னன் தங்கள் பரம்பரையையே வசைபாடி ஓலை அனுப்பியுள்ளானே... என்ன செய்யலாம்?''

''போகட்டும்... என்னை உசுப்பேற்றி போருக்கு அழைக்கும் அவன் தந்திரம் மட்டும் பலிக்காது!''

– ஆர்.பிரகாஷ்

"மன்னர் எச்சரிக்கையான வர்னு எதை வைச்சி சொல்றே!"

"ஆராய்ச்சி மணிக்குப் பதிலா, காலிங்பெல்லை வைச் சிட்டு ஸ்விட்சு கன்ட்ரோலைத் தமது இடுப்பிலே பொறுத்தியுள் ளாரே!"

- ஆ.அமல்ராஜ்



வாமல், சிவகாமி வீட்டு வாசலில் போய் நின்றுகொள்வான்.

அப்படிக் கவனம் இருந்தும் காது அறுந்துபோய்விட்டது. அறுந்து போய்விட் டதைச் சரியாகத் தெரிந்துகொண்ட நாளில் சிவகாமி அழுதாள். ஊரே கூடிவிட்டது. பாட்டியின் உடம்பு நடுங்க ஆரம்பித்தது. கண்களில் நீர் வழிந்தது. "சாமி..." என்ற படி கைகளைக் கூப்பி அனைவரையும் பார்த்தாள். பொது மன்னிப்பு தரும் பாவ னையில், எல்லோரும் பார்த்தார்கள். பிறகு சிவகாமியின் அறுந்து போன காதை, நன்கு சுத்தம் செய்துவிட்டு கொதிக்கும் வெந்நீரில் போட்டெடுத்த ஊசி நூலால் தைத்துவிட் டாள். முட்டை போடும் வெடக்கோழியைக் கொண்டு வரச் சொன் னாள். அறுத்து அதன் ரத் தத்தைத் தைத்த இடத்தில் தொட்டு வைத்தாள். ரொம்ப நேரம் அப்படி பொட்டுப் பொட்டாய் வைத்துக்கொண் டிருந்தாள். வெடக் கோழியை என் கையில் கொடுத்துவிட்டார்கள். அம்மா கோழியைச் சமைப்பதில் கெட்டிக்காரி. ஆனால், சிவகாமி வீட்டுக் கோழியை ருசிக்க இயலவில்லை பாட்டிக்கு.

அம்மா தண்டட்டி போட்டு காதின் மேல்புறங்களில் தங்கக் கம்மல்களைக் குத்தியிருப்பாள். அப்படி தண்டட்டி போடாதவர்களை 'மூளிக்காரி' என் பாள். அம்மா அப்படிச் சொல்வதைக் கேட்டபடி இருந்த பாட்டி ஒருநாள், "நானும் மூளிக்காரிதா" என்றாள். தாத்தா தொடுப்பு வைத்திருந்த பெண் தண்டட்டி போட்டு காது வளர்த்த தில்லை. சின்னதாய் மினுங்கும் தங்கக் கம்மல்களைப் போட்டிருப்பாள். காது நுனியில் கடுகளவு தங்கத் துணுக்கு

# "காது குத்தி காது வளர்க்கறதே..."

மினுங்கிக்கொண்டிருக் கும். பார்க்க அழகாக இருக் கும். சாகும் வரைக்கும் தாத்தா பாட்டியிடம் திரும்பவில்லை.

"தண்டட்டி போடாதவங்க மட் டுந்தா மூளிக்காரியா?" என்று பாட்டி முனகிக் கொண்டிருப்பது, சாகிற வரைக் கும் வெகு சாதாரணமாக இருந்தது. "காது குத்தி காது வளர்க்கறதே..." என்ற பாட்டியின் குரல் தெருக்களில் ஓய்ந்த போது, அவள் தன்னை மூளிக்காரி என்று சொல்லிக்கொண்டது, ஓயாமல் தெருக் களில் மிதந்துகொண்டிருந்தது. ○

# டென்ஷன் இல்லாத

டாக்டர் எம்.ராஜேந்திரன்

என்னிடம் சிகிச்சைக்கு வந்திருந்த அந்த இளைஞருக்கு 27 வயது இருக்கும். வயிற்றுப் பிரச்னை அவரை மிகவும் பாடாய்ப் படுத்தியிருக்கிறது.

''அப்பா அம்மா ஊரிலே இருக்காங்க. நான் மட்டும்தான் தனி வீட்டிலே இருக்கேன். ஹோட்டல் சாப்பாடு என்பதால்தான், எனக்கு இந்தப்



பிரச்னை என்று நினைத்தேன். சமையலுக்கு ஆளைப் போட்டேன். ஆனா, வீட்டுச் சாப்பாடும் எனக்கு ஒத்துக்கலே. அதான் உங்ககிட்டே வந்தேன்.''

அவர் என் கிளினிக்குக்குத் தனியாக வரவில்லை. அவரது அப்பா, சித்தப்பா, நண்பர்கள் என... அத்தனை பேரும் வந்து கவலை பொங்க என் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

அந்த இளைஞரிடம் சில கேள்விகளைக் கேட்டேன்.

''ஆஃபீஸ்ல ஏதாவது பிரச்னையா? மேலதிகாரி தொல்லையா?''

''அதெல்லாம் இல்லை. நானே மேலதிகாரிதான்.''

''உங்களுக்கு வேறெந்தப் பிரச்னையும் இல்லை. வீட்டிலே ஒரு துணை தேவை. கல்யாணம் செய்துக்கங்க'' என்று நான் கூறியதும், அத்தனை பேரும் சிரித்தார்கள். மனைவியின் அரவணைப்பும் அவளது இதமான வார்த்தைகளும் அவரது மனக்குறையைப் போக்கிவிடும் என்பது எனக்கு நன்றாகவே புரிந்தது.

உணவுப் பழக்க வழக்கங்களில் மனதுக்கு எவ்வளவு தொடர்பு உண்டு என்பதை விளக்க, இதோ இன்னோர் உதாரணம்:

என்னிடம் சிகிச்சைக்கு வந்தவருக்கு வயது சுமார் நாற்பது இருக்கும். எண்டோஸ்கோப் மூலமாகச் சோதித்த போது, அவரது உணவுக்குழாயில் நிறைய புண்கள் இருந்தது தெரிந்தது.

''உங்களுக்குக் குடிப்பழக்கம் உண்டா?''

# டின்னர்?



## கூலா சாப்பிடுங்க - 13

''இல்லை''

''புகைப்பழக்கம்?''

''இல்லை''

புண்கள் ஆறுவதற்கு உரிய மருந்துகளை எழுதிக் கொடுத்தேன். அமிலம் அதிகம் அடங்கிய உணவுகளைத் தவிர்க்கச் சொன்னேன்.

ஒரு மாதம் கழித்து அவர் மீண்டும் வந்தார். ''நீங்கள் சொன்னதையெல்லாம் செய்தேன். ஆனாலும் நெஞ்செரிச்சல் குறையலையே டாக்டர்'' என்றார்.

அதன் பிறகு அவரது தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றிப் பேசத் தொடங்கினேன். அவர் ஜவுளி வியாபாரம் செய்பவர். வேலையையெல்லாம் முடித்துவிட்டு, தினமும் அவர் தூங்குவதற்கே வெகுநேரமாகிவிடும். அவர் வீட்டில் தினமும் ஒரு பிரச்னையைச் சந்திக்க வேண்டியிருந்தது.

அவர் மாடிப் போர்ஷனில் வசிக்க, அந்த வீட்டின் சொந்தக்காரர் அதன் கீழ்ப் பகுதியில் வசித்து வந்தார். காலை ஐந்து மணிக்கு எழுந்து மோட்டாரை 'ஆன்' செய்துவிடுவார் வீட்டுக்காரர். மோட்டாரின் சத்தமும் மிக அதிகமாக இருக்க, அது நம்ம ஆளை நிச்சயம் எழுப்பிவிடும். தூக்கம் கெட்டுப் போனதில் அவருக்கு எரிச்சல் கிளம்பும்.

'விடிகாலையிலே எதற்கு மோட்டாரைப் போடறீங்க?' என்று சண்டைக்குப் போக, வீட்டுக்காரர் 'அப்படித்தான் போடுவேன்' என, தினமும் வாக்குவாதம்.

உணவுப் பாதை பாதிப்பில் மனதுக்கும் பங்கு உண்டு என்றேனே. மேற்படி பிரச்னையே உணவுப்பாதை எரிச்சலில் கொண்டுவிட்டிருந்தது.

''வியாதி உங்க உடம்பிலே இல்லை. உங்க வீட்டின் கீழ்போர்ஷனிலே இருக்கு. நீங்க ஏன் உங்க வீட்டை மாற்றக் கூடாது?'' என்று கேட்டேன்.

வசதியாக இருப்பதால், வீட்டைக் காலி செய்வது குறித்து சீரியஸாக யோசிக்கவில்லை என்றார்.

பிறகு எனக்குத் தெரிந்த இடத்தில் ஒரு வீடு காலியாக, அதை அவருக்குத் தெரியப்படுத்தினேன். அதன் பின் அவர் வேறு வீட்டுக்குக் குடியேற, அவரது நெஞ்செரிச்சல் தானாகக் குணமாகிவிட்டது!

வேறொன்றும் இல்லை. தன்னோடு நியாயம் இல்லாமல் தினமும் சண்டை போட்ட வீட்டுச் சொந்தக்காரரைப் பார்க்கும்போதெல்லாம், அவர் உடலில் ஹார்மோன்கள் மாறுபட்டு நெஞ்சில் எதிர்க்களிப்பு தோன்றி, அது நெஞ்செரிச்சலாக மாறியிருந்தது. காரணம் மறைந்தபிறகு விளைவும் மறைந்துவிட்டது.

டின்னராவது டென்ஷனில்லாமல் சாப்பிடுவது நலம்.

(தொடரும்)

எழுத்து வடிவம்: **ஆதர்ஷ்**



ஆண் - பெண் விக்தியாசமின்றி நெல்குத்தல்

# கஷ்டப்படுத்தாத இஷ்ட தெய்வம் 2

**ப**தினேழாம் நூற்றாண்டு. மதுரையிலிருந்து பத்து மைல் தொலைவிலுள்ள மடப்புரத்தில், பெரிய முகுந்து சிறிய முகுந்து என்ற இரு சகோதரர்கள் பெரும் பண்ணை யார்களாக இருந்தனர். சிற்றரசன் ஒருவன், அந்தச் சகோதரர்களின் இரு குமாரிகள்மீதும் மோகம் கொண்டு பெண் கேட்டான். சகோதரர்கள் மறுத்தனர். பெண்களைச் சிறையெடுத்துச் செல்ல சிற்றரசன் முயற்சித்தான்

மானமே பெரிதென எண்ணிய சகோதரர்களில் இளையவர் தம் மகளை, தானியக் களஞ்சியத்தில் புதைத்துக் கொன்றார். மூத்தவர் சிதை வளர்த்து அதில் தம் மகளைத் தள்ளிவிட்டுக் கொன்றார். அப்போது மகளின் சேலையின் முந்தானைப்பகுதி மட்டும் எரியாமல் கிடந்தது. அதை எடுத்துக் கொண்ட பெரியமுகுந்து, தம்பியையும் அவரது மனைவியையும் தஞ்சைப் பகுதிக்குச் செல்லும்படி பணித்துவிட்டு, தம் மனைவியுடன் இராமேஸ்வரம் நோக்கிக் கிளம்பினார். இவர்களின் ஏற்பாட்டின்படி, சில மணி நேரத்தில் பண்ணைவீடு எரிந்து தரைமட்டமானது!

**ம**துரை ராமேஸ்வரம் சாலையில், பரமக்குடிக்கு முன்பாக பெருங்கரை என்ற கிராமத்தில், அட்டாள சொக்க நாதர் - அங்கயற்கண்ணி கோயிலில் விழா நடந்து கொண்டிருந்தது. முதல் மரியாதையை யார் பெறுவது என்ற வாக்குவாதத்தில் கலவரம் வரும்போல் தெரிந்தது.

நடந்து வந்த களைப்பில், பெரிய முகுந்து தம்பதியர் கோயில் மடத்தில் அமர்ந்தனர். முதல்மரியாதை பிரச்னை நடந்துகொண்டிருப்பதைக் கவனித்த பெரிய முகுந்து, அதைத் தாம் தீர்த்து வைப்பதாகக் கூறி இருசாராரையும் தமக்கு இருபக்கமும் நிற்க வைத்து காளாஞ்சிகளை (தேங்காய் மூடி, பழம், வெற்றிலை, பாக்கு) இரு கைகளிலும் இரண்டை எடுத்து, கையை மாற்றி வலப்புறமிருப்போருக்கு இடது கைக் காளாஞ்சியையும், இடப்புறமிருப்போருக்கு வலது கைக் காளாஞ்சியையும் தந்து பிரச்னையைத் தீர்க்கிறார். ஊர் மக்கள் அவரைத் தங்களின் மணியக்காரராக ஏற்றுக்கொள்ள, அங்கேயே குடும்பத்தை அமைத்துக் கொள்கின்றனர் பெரியமுகுந்து தம்பதியர்.

வீட்டின் ஒரு பகுதியில் கோயில் அமைத்து, அதில் முந்தானை சேலையை நார்ப்பெட்டியில் வைத்து, அதையே தெய்வமாகப் பூஜித்து வந்தனர்.

முகுந்துவுக்கு மேலும் பல குழந்தைகள் பிறந்து குடும்பம் பெருகியது. பரம்பரை பரம்பரையாக சேலைக்காரி வழிபாட்டில் சில கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்து வருகிறார்கள்.

பழையனூர் சேலை வேண்டும். கரும்பால் பந்தலிட்டு, மரிக்கொழுந்து மல்லிகைப் பூவால் வேய்ந்து கருவறை அமைக்க வேண்டும். குடும்பத்துக்கு

இவ்வளவு என்று நெல் தந்து, அதை மறைவிடத்தில் வைத்து ஆண் - பெண் வித்தியாசமின்றி உரலிலிட்டுக் குத்தி அரிசியாக்க வேண்டும்.

குத்திய அரிசியிலிருந்து அப்பம், பணியாரம் போன்ற பலகாரங்களைத் தயாரிக்க வீட்டுக்கு ஓர் அடுப்பு என்ற கணக்கில், கோயில் வளாகத்திலேயே, நள்ளிரவு ஒரு மணிக்கு பலகாரங்களைத் தயாரிக்க வேண்டும்.

சேலையை முறுக்கி உருவகப்படுத்தி, பந்தலுக்குக் கீழ் வைத்து, அதற்குமுன் பலகாரங்களைக் குவித்துப் படையலிட வேண்டும்.

சப்தமில்லாமல் நடக்கும் வழிபாடு அதிகாலை நான்கு மணிக்கு முடிந்ததும் பலகாரங்களை, இருபத்தைந்து குடும்பத் துக்கும் சரிசமமாகப் பிரித்துத் தர வேண்டும்.

பலகாரங்களை வெளியூரில் வசிப்பவர் கள் எடுத்துச்செல்லக் கூடாது என்பதால், தின்றது போக மீதியை மண்ணில் குழிதோண்டிப் புதைக்க வேண்டும்.

வீட்டுத் தெய்வம், குடும்பத்தில் வாழ்ந்து கொல்லப்பட்டது என்பதால், ஊரின் காவல் தெய்வம் சோனையாவுக்கு முதலில் பூஜை செய்து, பொங்கல் வைக்க வேண்டும். பொங்கல் பானைகளை, குடும் பப் பெண்கள் தலையில் வைத்து வீட்டுக் குக் கொண்டு வருவது மரபு. இதனால் வீட்டுத் தெய்வத்தை வணங்குவதற்குக் காவல் தெய்வம் அனுமதி கொடுக்கும் என்பது ஐதீகம்.

சேலைக்காரி வீட்டுத் தெய்வ வழிபாடு, சுமார் இருபது வருடங்களாகத் தடைப்பட்டு நின்றுவிட்டது. காரணம், 25 குடும்பங் களிலும் உள்ள வாரிசுகள் வேலை கிடைத்து வெளியூர்களில் தங்கிவிட்டதுதான். கடந்த 16 வருடங்களாக என்னுடைய முயற்சியில் பங்காளிகளை ஒன்று சேர்த்து, வழிபாடு செய்து வருகிறோம்.

* சேலைக்காரி என்ற பெயரை, பெண் குழந்தைகளுக்குச் சூட்டமாட்டோம்.
* கோயில் வழிபாட்டு நிகழ்வுகளைப் புகைப்படம் எடுக்க விடமாட்டோம்.
* சேலைக்காரியின் வரலாற்றை, எங்கள் மூதாதையர் மூலம் கேட்டு எழுதி வைத்து, அதைத் தற்போதுள்ள இளைய தலை முறைக்கும் சொல்லி வருகிறோம்.
* சேலைக்காரி எங்களுக்கு வெற்றி களைத் தேடித்தந்த சம்பவங்கள் ஏராளம்.

**செய்தியும் சித்திரங்களும்:**
**இரா.கல்யாணசுந்தரம்**

# சேர்த்துவைத்த சேலைக்காரி



பொங்கல் பானை படையல்

### மான'ஹோல்' பிரச்னை!

மும்பையில் ஜூன் மாதம் என்றால் கடுமையான மழையும், அதன் காரண மாகப் பெரும் வெள்ளமும் வாடிக்கை. இந்த வருடத்து மழை சீசனை ஒட்டி, மும்பை வருகிற அமெரிக்கர்களுக்காக தனது வெப் சைட்டில் சில டிப்ஸ்களை வழங்கி இருக்கிறது அமெரிக்க தூதரகம். அதில் ஒன்று: மழைக்காலத்தில், மும்பையில் 'மேன் ஹோல்' மூடிகளைத் திறந்து வைத்திருப்பார்கள். மழைத் தண்ணீரில் நடக்கும்போது மிகவும் எச்சரிக்கையாக இல்லாது போனால், நீங்கள் கழிவுநீர் பாதைக்குள்ளே விழ வேண்டியதுதான் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'மழைத் தண்ணீர் வடிவதற்காக மேன் ஹோல் மூடிகளைத் திறந்து வைக்கிறபோது, தக்க முறையில் எச்சரிக்கை செய்வதுடன், மாநக ராட்சி ஊழியர்கள் அங்கே காவல் நின்று மக்களுக்கு உதவி செய்வார்கள். அப்படி இருக்கும்போது, உங்கள் கிண்டலான எச்சரிக்கை வரிகள், மும்பை மாநகராட்சியின் இமேஜுக்கு இழுக்கு ஏற்படுத்தும்படி இருக்கின்றன. எனவே, அவற்றை உடனடியாக நீக்கி விடுங்கள்' என்று காரசாரமாக அமெரிக்க தூதரகத்துக்குக் கடிதம் எழுதி இருக்கிறது மாநகராட்சி.

### மாடி மேலே மழைநீர்!

இதுவும் மாநகராட்சி - மழை சம்பந்தப்பட்ட விஷயம்தான். மும்பை மாநகராட்சியின் தலைமை அலுவலகம் 125 வருடங்களாக பழைய கட்டடம் ஒன்றில் இயங்கி வருகிறது. அந்தக் கட்டடத்தின் ஆறாவது மாடியில் சமீபத்திய மழையின் காரணமாகத் தரையில் கணுக்கால்

# 50-50 அரசியல்!



அளவுக்குத் தண்ணீர் தேங்கியதுடன், மர பீரோக்கள், மேஜைகளுக்கு உள்ளே தண்ணீர் புகுந்து, பல முக்கிய தஸ்தாவேஜுகளைப் பாழாக்கிவிட்டது. மாநகராட்சிக் கூட்டத்தில் இது குறித்துக் கடும் விமர்சனம் நடந்தது. 'தன் அலுவலகத்தையே மழையிலிருந்து பாதுகாத்துக் கொள்ள முடியாத மும்பை மாநகராட்சி, மக்களையும், மும்பை நகரத்தையும் எப்படிப் பாதுகாக்கப் போகிறது?' என்று மும்பைவாசிகள் கோபமாகக் கேட்கிறார்கள்.




### என்ன ஒற்றுமை!

இந்தக் கல்வி ஆண்டில், மகாராஷ்டிரா முழுவதிலுமாக ஐம்பது கல்லூரிகளைத் திறக்க அனுமதி வழங்கப்பட்டுள்ளது. அவை அரசு உதவி பெறாத தனியார் கல்லூரிகள் என்பது ஒரு பக்கமிருக்க, 25 கல்லூரிகள் விஷயத்தில் காங்கிரஸும், 25 கல்லூரிகள் விஷயத்தில் தேசியவாத காங்கிரஸும் இறுதி முடிவு எடுப்பார்கள் என்று ஒரு அண்டர் ஸ்டாண்டிங் ஏற்பட்டுள்ளது என்பதுதான் அரசியல் மற்றும் மீடியா வட்டாரத்தில் பரபரப்பான பேச்சு. அட ஃபிஃப்டி-ஃபிஃப்டி!

### மராத்தி மகிமை!

சிவசேனாவும், ராஜ் தாக்கரேவின் மகாராஷ்டிரா நவ நிர்மாண் சேவாவும் மராத்தி மற்றும் மண்ணின் மைந்தர்கள் செண்டிமெண்ட்டைக் கையில் எடுத்துக் கொள்ளும்போது, மகாராஷ்டிராவை ஆளும் காங்கிரஸ் கூட்டணி அரசு சும்மா இருக்குமா? கடைகள் மற்றும் அனைத்து வர்த்தக நிறுவனங்களின் பெயர்ப் பலகைகளை மராத்தியில் கண்டிப்பாக எழுதி வைக்க வேண்டும் என்று உத்தரவிட்டுள்ளது. 'மராத்தியில் பெயர் எழுதாவிட்டால் கடுமையான விளைவுகளைச் சந்திக்க வேண்டி இருக்கும்' என்றும் எச்சரித்துள்ளது.

### ஜுஜுபி அபராதம்!

மும்பை உயர்நீதி மன்றம் மிகவும் கடுமையான நடவடிக்கை ஒன்றை எடுத்துள்ளது. தங்கள் கடமையிலிருந்து தவறியதாகக் கூறி மகாராஷ்டிரா சுற்றுச் சூழல் கட் டுப்பாட்டுக் கழகச் செயலாளர், மாநில அரசின் சுகாதாரச் செயலாளர் ஆகிய இருவருக்கும் தலா ஆயிரம் ரூபாய் அபராதம் விதித்து, அத்தொகையை அந்த அதிகாரிகள் தங்கள் சொந்தப் பணத்திலிருந்து கட்ட வேண்டும் என்றும் சொல்லிவிட்டது. எதற்காக இந்த நடவடிக்கை? மும்பை நகரத்தின் சுமார் 40 மருத்துவமனைகளைத் திடீர் சோதனை செய்த குழு, 'அவை ஆஸ்பத்திரி கழிவுகளை முறைப்படி அப்புறப்படுத்த நடவடிக்கை எடுக்கவில்லை; அதுமட்டுமில்லாமல் பல ஆஸ்பத்திரிகளில் இந்த விஷயம் குறித்துத் துளியும் அக்கறை காட்டவில்லை. மேலும், அந்த ஆஸ்பத்திரிகள் மீது கடும் நடவடிக்கை எடுக்கவும் தவறிவிட்டன மாசுக்கட்டுப்பாட்டுக் கழகமும், சுகாதாரத் துறையும்' என்று நீதிபதிகள் கடுமையாகச் சொல்லிவிட்டார்கள்.

அது சரி, ஆயிரம் ரூபாய் அபராதம் வெறும் ஜுஜுபிதானே!

**– எஸ்.சந்திரமௌலி**

# அருள்வாக்கு

நமது ஆத்ம சுத்தி, அந்தரங்க சுத்தி, ஒழுக்கம் - இவற்றைக் கல்வியின் உறுபயனாகக் கருத வேண்டும். நம் புலன்களுக்கு மட்டுமே சுக உணர்ச்சியையும், மகிழ்ச்சியையும் எளிதில் தரக்கூடியவகையில் உள்ள எல்லா அம்சங்களையும், போதனா முறையிலிருந்து விலக்க வேண்டும். மேல் நாட்டாரின் நடை, உடை, பாவனை, உணவு, உரையாடல் முதலியவற்றில் ஈடுபட்டு அவற்றைக் கையாளுவோமானால், படிப்படியாக நமது பண்பாடு, அறம் இவற்றிலிருந்து நாம் நழுவி, நமது ஆன்ம நலனுக்கு இடையூறு செய்துகொள்வதோடு, புண்ணிய பூமியாகிய இந்தப் பாரத நாட்டுக்கே கெடுதல் ஏற்படுத்திவிடுவோம்.

பாரத நாட்டில் தற்காலம் நமது மக்கள், பெரும்பாலும் சிறு பிராயம் முதலே நம் தேசத்துக்குரிய ஒழுக்கம், பண்பாடு, இறை வணக்கம், ஆத்ம தியானம் இவ்விதமான பழக்கமே இல்லாமலிருந்து வருகின்றனர். விஞ்ஞானத்தைப் பயில்வதில் மட்டுமின்றி, வாழ்முறையிலும்கூட வெளிநாட்டாரது முறைகளையே பின்பற்றி வருகின்றனர். இதனால், மக்களுக்கு இந்த உலகத்தின் சாமானிய இன்பத்தையும் மறு உலகத்தின் பேரின்ப வழியையும் அடையத் தடை ஏற்படுகிறதென்பது தெளிவு. ஆஸ்திகப் பரம்பரையில் தோன்றிய நமது குழந்தைகளுக்கு, சிறு வயது முதலே நமது பண்புக்குரிய தருமம், ஒழுக்கம், பக்தி, ஞானம் முதலியவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுவதற்கு அநுகூலமான கல்வியைப் போதிக்க வேண்டியதே நம் முதற் கடமை.

- ஜகத்குரு
காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்யா
சுவாமிகள்

# முதல் கடமை

# சர்க்கரை வியாதியால் காலை இழக்க வேண்டாம்!

ஒருவர் எனக்கு சர்க்கரை நோய் இல்லை என்று சொன்னால், அவர் இன்னும் சர்க்கரை நோய் பரிசோதனை செய்து கொள்ளவில்லை என்று பொருள், அந்த அளவிற்கு சர்க்கரை நோய் பெரும்பாலானவர்களின் வாழ்விற்குள் கலந்து விட்டிருக்கிறது.

சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஏற்படும் பலவித பாதிப்புகளில் முக்கியமானது கால் பாதிப்பு, கால்கள் பாதிக்கப்பட்டவர்களை நடை பிணம் என்று கூட சொல்ல முடியாத ஒரு வேதனையான நிலை ஏற்பட்டு விடும். ஆனால், இனிமேல் சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டு காலை இழந்து விடுவோமோ? என்று கவலைப்படுபவர்களும், கால் பாதிப்புக்குள்ளாகி விரல் துண்டிப்பு, கால் துண்டிப்பு கட்டாயம் செய்தே ஆக வேண்டும் என்று ஆபத்தான கட்டத்தில் இருப்பவர்களும் இனி கவலைப்படத் தேவையில்லை உங்களுக்கென வந்துவிட்டது **பூர்ண சஞ்ஜீவி சிகிச்சை**

பூர்ண சஞ்ஜீவி சிகிச்சை என்பது உடலில் எதிர்ப்பு சக்தியை உருவாக்கும் சிகிச்சை ஆகும் காலை, மாலை இருவேளையும் வெறும் வயிற்றில் நோய் எதிர்ப்புக்கான மூலிகைச் சாறுகளைக் குடித்து பத்தியம் இருந்து பத்திய உணவுகளையே உண்ணுதலாகும். இவ்வித மூலிகைச் சாறு சிகிச்சை மூலம் சர்க்கரை வியாதியால் ஏற்படும் டயாபடிக், ஹாங்ரீன் பாதிப்புகளுக்கு ஆபரேஷன் செய்யாமல் கால்களை முழுமையாக காப்பாற்றமுடியும். மேலும், கண்பார்வை பாதிப்பு , சிறுநீரக நோய்கள், மூட்டுவாத நோய், எய்ட்ஸ், கல்லீரல் நோய், பெண்களின் கர்ப்பப்பை கோளாறு போன்ற எந்த நோயினால் பாதிக்கப்பட்டிருந்தாலும், பூர்ண சஞ்ஜீவி சிகிச்சை முறையினால் போக்க முடியும்.

பூர்ண சஞ்ஜீவி சிகிச்சை மூலம் உங்கள் உடலின் எதிர்ப்பு சக்தியை உருவாக்கி, சர்க்கரை வியாதி தாக்கத்தால் ஏற்படும் வேறுவித பாதிப்புகளையும் குணமாக்க முடியும்.

**இச்சிகிச்சை ரத்னா சித்த மருந்துவமனை மூலிகை ஆராய்ச்சி மைய டாக்டர்கள் க. திருத்தணிகாசலம், தி. வேணி** இருவரின் மூலிகை சிகிச்சை ஆராய்ச்சி மூலம் நிருபணமாகியுள்ளது.



டாக்டர் **க. திருத்தணிகாசலம்** (அரசு பதிவு பெற்ற மருத்துவர்)
ரத்னா சித்த மருத்துவமனை மற்றும் மூலிகை ஆராய்ச்சி மையம்
750, பெரியார் நெடுஞ்சாலை, என். எஸ். கே. நகர், அரும்பாக்கம், சென்னை – 106.
போன்: 044 – 2622 3828, 2622 4688, 94433 74341, 94445 34444
Email: thiruthani12@ yahoo.co.in. www: rathnasiddha.com

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*
*ஸ்ரீ கோவிந்த தீக்ஷித புண்யஸ்மரண ஸமிதி* (Regd.)
**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**
29-30, East Iyen Street, KUMBAKONAM, Thanjavur Dt. Tamil Nadu -612 001. India.
E-mail : vedagdps@sancharnet.in Website : www.rajapatasala.in

☎ Off.: (0435)
2425948
2401789
Patasala :
2401788
2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 466 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 19 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் கடிதத்தில் தங்கள் போன் (with STD Code)/மொபைல் எண்ணை குறிப்பிடும் படி கேட்டுக்கொள்கிறோம். நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 700/- | Rs. 8,000/- |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 2,000/- | Rs. 25,000/- |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs.1,30,000/- |

**நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.**

Mar-2007



என்ன தான் செய்வது?' என்று கேட்டிருக்கிறார் ஜூரிக்களுள் ஒருவர்! 'சுடோகு விளையாட்டு என் மூளையைச் சுறுசுறுப்பாக வைத்துக்கொள்ள உதவு கிறது' என்று அறிவியல் விளக்கம் கொடுத்திருக்கிறார் மற்றொருவர்.

* இளவரசர் சார்லஸ்



* ஆஸ்திரேலிய கோர்ட்

### சுறுசுறுப்புக்கு சுடோகு!

ஆஸ்திரேலியாவின் சிட்னி நகரில் மூன்று மாதங்களாக இழுத்துக் கொண் டிருந்த ஒரு வழக்கை நிறுத்தி வைத் திருக்கிறார் மாவட்ட நீதிபதி. வழக்கை விசாரிப்பதற்காக நீதிமன் றத்தால் அமர்த்தப்பட்ட ஜூரி எனப் படும் நடுவர்களில், பாதிக்கும் மேலானவர்கள் வழக்கைக் கவ னிப்பதே இல்லை என்பதுதான் காரணம்!

# மூன்றரை நூற்றாண்டு கடன்!

விசாரணைகள் ஒரு பக்கம் நடந்துகொண்டிருக்க, இந்த ஜூரிகள் படு சீரியஸாக 'சுடோகு' கட் டங்களை நிரப்பிக் கொண்டிருந்திருக் கிறார்கள். குனிந்த தலை நிமிரவே இல்லை. அவ்வளவு கவனமா குறிப் பெடுக்கிறார்களோ என்று நினைத்தால், குறிப்பேட்டில் ஏதோ பேருக்குக் கிறுக்கி வைத்திருக்கிறார்கள். வக்கீல்கள் எடுத்துக் காட்டிய முக்கியமான 'பாயின்ட்'களில் ஒன்றுகூட ம்கூம்... அந்தளவுக்குக் கட் டம்போட்டு கலக்கிக் கொண்டிருந்தார் களாம்.

'நான் முழுவதும் ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்க முடியவில்லை. வேறு

### வயசும் மவுசும்!

அடுத்து வருகிற ஜூலை மாதத்தில் பிரபல பாப் பாடகி மடோனா தமது ஐம்பதாவது வயதில் அடியெடுத்து வைக்கிறார்.

'அப்படியா...! நம்பவே முடியலே' என்று நீங்கள் ஆச்சர்யப்படுவது புரிகிறது.

அது என்ன மாயமோ தெரியல... மடோனாவுக்கு வயசு ஏற ஏற, மார்க்கெட் டிலும் மவுசு ஏறிக்கொண்டே இருக்கிறது. ஆடியோ, வீடியோ நிறுவனங்களும் அவரது குரலை டாலர்களாக மாற்றிக் கொண்டிருக்கின்றன. அந்த ஆசை இப்போது முன்னணி பதிப்பகங்களுக்கும் வந்துவிட்டது.

பிரபல சைமன் அண்ட் ஜஸ்டர் பதிப் பகம், மடோனாவின் தம்பி கிறிஸ்டோபர் சிக்கோ எழுதும் புத்தகத்தை வெளியிட

இருக்கிறது. தன் அன்பு அக்காவைப் பற்றி 'லைஃப் வித் மை சிஸ்டர் மடோனா' என்ற புத்தகத்தை மும்முரமாக எழுதிக்கொண் டிருக்கிறார்.

பல முன்னணி எழுத்தாளர்களும் அதற்கு உதவி செய்து(?) வருகிறார்கள்!

முதல் பதிப்பு மட்டுமே மூன்றரை லட்சம் பிரதிகள் என்கிறது பதிப்பகத் தகவல். புத்தகத்தில் அப்படி என்ன ஸ்பெஷல்? மடோனா என்ற பெயர் மட்டும் போதாதா என்ன?

தம்பி மாய்ந்து மாய்ந்து எழுதிக் கொண் டிருக்கும் புத்தகத்தைப் பற்றி மடோனா கண்டுகொள்ளவே இல்லை. அவரைப் பற்றி எழுதப்படும் எந்தப் புத்தகத்துக்கும் அவர் ஒத்துழைப்பு தருவது கிடையாது. அதற்காக, தம்பிக்கும் கூடவா?

### மூன்றரை நூற்றாண்டு கடன்!

பகை, நெருப்பு, கடன் மூன்றிலும் மிச்சம் மீதி வைக்கக்கூடாது. இங்கிலாந்து இளவரசர் சார்ல்ஸுக்கு இந்த உண்மை காலம் கடந்துதான் உறைத்திருக்கிறது.

1651ல் இங்கிலாந்தின் மன்னராக இருந்த இரண்டாம் சார்லஸ், ஆடை தயாரிப்பு நிறுவனம் ஒன்றில் போலீஸ் வீரர்களுக்கான சீருடைகளைத் தயாரிக்குமாறு ஆர்டர் கொடுத்தார். இட்ட பணியைச் செய்து முடித்தது அந்த நிறுவனம். ஆனால், மன் னர் கொடுக்க வேண்டிய பணத்தில் 453 பவுண்ட்ஸ் செட்டில் ஆகாமல் அப்படியே இருந்தது. இதெல்லாம் ஒரு மேட்டரா என்று கண்டுகொள்ளாமல் போனாரோ என்னவோ?

மூன்றரை நூற்றாண்டுகள் முடிந்த வேளையில் இளவரசர் சார்ல்ஸ் வட்டியைக் கழித்துவிட்டு அசலை மட்டும் கொடுத்து, கடனை அடைத்திருக்கிறார். இரண்டாம் சார்ல்ஸ் வாங்கிய கடனை இளவரசர் சார்ல்ஸ் வாங்கியதாக சரித்திரப் பிழை நேர்ந்து விடும் என்று பயந்துவிட்டாரோ என்னவோ?

- ஸாந்த்



## உலகே மாயம்

* பாடகி மடோனா...

# வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்

உலகத்திலே எந்த பக்தனும் மனச் சாந்தியைத்தான் தேடிப் போகிறான். அதைத் தேடித்தான் நாமும் இப்போது தென்குளந்தை என்றும் திருக்குளந்தை என்றும் அழைக்கப்படும் திவ்ய தேசத் துக்கு, மாயக் கூத்தன் எம்பெருமானைச் சேவிப்பதற்காக வந்திருக்கிறோம். பெருங் குளம் என்றும் இந்த திவ்ய தேசத்துக்குப் பிரசித்தமாகப் பெயர்.

கமலாவதி நாச்சியாரைத் தன்னுடைய திருமார்பிலே ஏற்றுக்கொண்டு, அருகிலே ஸ்ரீ தேவி, பூதேவி நாச்சியார்களோடு எம்பெருமானுடைய ஆச்சர்யமான திருக் கோலம் இங்கே நமக்கு ஸேவையாகிறது.

'பெருங்குளம்' என்கிற பெயருக்கு ஏற்ப இங்கே மிகப் பெரிய குளம் இருக் கிறது. அலை எறிகிற குளம்; பெருமானு டைய திருவடிக்கு மிக அருகிலேயே இருக்கிறது. இதன் அருகே வேதஸாரன் என்கிற முனிவரும் அவருடைய மனைவி யான குமுதவல்லி நாச்சியாரும் வசித் தார்கள். பெருங்குளத்திலே தினந்தோறும் நீராடி, தங்களுக்குப் புத்திரப்பேறு வேண் டும் என்று இந்த எம்பெருமானைப் பிரார்த் தித்தார்கள். எம்பெருமானும் அனுக்கி ரஹிக்க, ஒரு பெண் குழந்தையை ஈன் றெடுத்தார்கள். கமலாவதி என்று பெயரிட்டு அதை வளர்த்தார்கள்.

கமலாவதி வளரும்போதே 'மானிடர்க் கென்று பேச்சுப்படமாட்டேன்' என, ஆண் டாள் நாச்சியாரைப் போல் வைராக்கியம் கொண்டாள். 'பெருமானுக்கே வாழ்க்கைப் படுவேன். அவனைத்தான் கடிமணம் புரிவேன்' என்று சொல்லித் தவமிருந்தாள். பெருமானும் அவளுடைய தவத்தை மெச்சி, தன்னுடைய திருமார்போடேயே அவளை நாச்சியாராகச் சேர்த்துக்கொண் டான்.

கமலாவதி நாச்சியாரைத் திருமார்பில் ஏந்திய மாயக்கூத்தன், திருவடி தொடக்க மாக திருமுடி ஈறாக மிக அழகிய திருக் கோலத்தவன். இவர்கள் அருகிலே கரு டாழ்வாரும் உத்ஸவ மூர்த்தியாகக் காணப் படுவது அபூர்வமானதொரு காட்சி. 'சாதார ணமாக, எதிர்த்தாற் போலேதானே கருடனி ருப்பார்; அவர் எப்படி இங்கே வந்து சேர்ந் தார்?' என்று நமக்குத் தோன்றும். இதற் கொரு வரலாறு இருக்கிறது:

கமலாவதியைத் திருமார்பில் எம்பெரு மான் ஏற்றுக்கொண்ட பிற்பாடு, வேதசாரன் இத்தலத்திலிருந்தபடி கைங்கர்யம் பண்ணிக்கொண்டே வந்தான். ஆனால், யாரோ ஒரு துஷ்டன், அவனது மனைவி குமுதவல்லியை வட தேசத்துக் கோடி யிலே, ஹிமாசலத்துக்கு அருகே கொண்டு போய் சிறைவைத்து விட்டான்!

வேதசாரன் பெருமானைப் பிரார்த்திக்க, இந்த மாயக்கூத்தனும் உடனே இந்த கருடன் பேரிலே ஆரோஹணித்து, வேகமா கப் பறந்து போய் குமுதவல்லியையும் மீட்டுக்கொண்டு திரும்ப வந்து சேர்ந்தார். குமுதவல்லியைக் கவர்ந்து சென்ற அசுர னையும் அழைத்து வந்து, அவன் தலை யிலே ஏறி, பெருமான் நடனமாடினார்! காளிங்க நர்த்தனம் மாதிரி, இந்த நர்த்த னமும் மாயமான கூத்தாக இருந்ததாம். அதனால்தான் பகவானுக்கு இத்திருத்தலப் பெயர் மாயக்கூத்தன் என்பதாக ஏற்பட்டது.

மாயன்! நம் கண்ணால் பருக முடியாத ஆச்சர்யமான அழகுடையவன்; நம் மனத் துக்கு எட்டாத வியப்புக்குரிய ஆச்சர்யன்! குடக்கூத்தாடிய கண்ணன், குரவைக் கூத்தாடிய கிருஷ்ணன், இங்கே மாயக் கூத்தாடிய மாயனாக ஸேவை சாதிக்கிறான். கூத்தாடி என்றே கூட இவனை அழைப் பார்கள். திருநாங்கூர் திவ்ய தேசத்திலே 'குடமாடு கூத்தர்' என்று ஒரு பெருமான் ஸேவை சாதிக்கிறார்.

# மனங்கவரும்

சிறிய திருமடல் என்கிற பிரபந் தத்திலே, திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்திலே சாதிக்கிறார்:

*சீரார் குடமிரண்டேந்தி*
*செழுந்தெருவே*
*ஆராரெனச் சொல்லி*
*ஆடுமதுகண்டு...*
*வாராயோ என்றார்க்குச்*
*சென்றேன்*
*என் வல்வினையால்...*

'என் கண்ணன் குடக்



## கண்ணனைத் தேடி...



கூத்தாடுகிறான், வந்து பார்' என்று தாய்மாரும் தோழிகள் எல்லோரும் வந்து கூப்பிட்டார்கள்; நானும் போனேன்' என்று அதனை விவரிக்கிறார்.

குடக்கூத்து என்றால், இந்தக் கையில் இரண்டு குடங்கள், அந்தக் கையில் இரண்டு குடங்கள். அவற்றை இப்படியும்

# மாயக்கூத்தன்



''நான் மட்டும் இன்னும் அந்த அரங்கத்தை விட்டுப் போகாமல் உட்கார்ந்திருக்கிறேன். ஏன் தெரியுமா தோழி? 'இந்த நிகழ்ச்சி முடிந்துவிட்டது; நாம் எழுந்து போக வேண்டும்' என்கிற எண்ணம் எனக்கு வர வேண்டுமானால், என் மனம் என்னிடம் இருக்க வேண்டுமே. மனம் 'எழுந்திருக்கலாம்' என்று எண்ணினால்தானே காலுக்குச் செய்தி போகும்! அப்போதுதானே கால் ஓர் அடி எடுத்து வைக்கும்! ஆனால், என் மனமும் கண்களும் கூத்தாடிக் கொண்டிருந்த மாயக்கூத்தன் பின்னாலேயே போய்விட்டன. ஆகையால், எழுந்திருக்க வேண்டும் என்பதுகூட எனக்குத் தோன்றவில்லை'' என்கிறார்.

அவ்வாறு எழுந்து போய்விட்டால் உலக ஒலிகள் காதிலே படும்; உலக விஷயங்கள் கண்ணிலே படும்; உலக ருசிகளை நாக்கு கேட்கும்; உலகின் மணத்தை மூக்கு கேட்கும். ஆனால், மனத்தையும் இந்த்ரியங்களையும் மாயக்கூத்தனுடைய ஆட்டத்திலேயே சமர்ப்பித்துவிட்டார் போலும் திருமங்கையாழ்வார்.

***...என் மனமும் கண்ணும் ஓடி***

அப்படியும் தூக்கிப் போட்டு ஆடுவானாம் கண்ணன். பெண்கள் அம்மானை - கழக்கோடி ஆடுகிறபோது கற்களை இரு கைகளாலும் தூக்கிப் போட்டு மாற்றிப் பிடித்து, திரும்பப் போட்டு ஆடுவார்களே - அப்போது ஒரு கல்கூட கீழே விழாது! அந்த மாதிரி கண்ணன் குடங்களைத் தூக்கிப் போட்டு ஆட, ஒரு குடம் எப்போதும் தலைக்கு மேலே இருக்குமாம். அதோடு, இடுப்பிலே 'பறை' என்கிற பேரி வாத்தியத்தைக் கட்டிக்கொண்டு, ஆட்டத்தின் நடுவே அதை வேறு வாசிப்பானாம்!

இதை விவரிக்கிறார் திருமங்கையாழ்வார். இப்படி ஆடிய கண்ணன் கூத்தாடி முடித்துவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டான். வேடிக்கை பார்த்த மற்ற மக்களும் எல்லோரும் கிளம்பிப் போய்விட்டார்கள். ஆனால், திருமங்கையாழ்வார் பரகால நாயகி பாவனையில் - பெண் பாவனையில் - தெரிவிக்கிறார்:



*எம்பெருமான் திருவடிக் கீழ்*
*அணைய*
*இப்பால் - கைவளையும் மேகலையும்*
*காணேன் -*
*கண்டேன் கனமகரக் குழையிரண்டும்*
*நான்கு தோளும்!*

என்பது திருமங்கையாழ்வார் பாசுரம்.

**ம**னத்தையும் கண்ணையும் எல்லா இந்த்ரியங்களையும் பெருமானிடத்திலே வைக்கும் இவ்வனுபவத்தை நம்மாழ்வாரும் ஒரு பாசுரத்திலே (திருக்குறுங்குடி நம்பி குறித்து) சாதித்தார்:

*'எங்ஙனேயோ அன்னைமீர்காள்*
*என்னை முனிவதுநீர்*
*நங்கள் கோலத் திருக்குறுங்குடி*
*நம்பியை*
*நான் கண்ட பின்*
*சங்கினோடும் நேமியோடும்*
*தாமரைக் கண்களோடும்*
*செங்கனிவாய் ஒன்றினோடும்*
*செல்கின்றது என் நெஞ்சமே*

- பெருமானுடைய மூக்கு, அவனுடைய திருக்கண்கள், அவனுடைய திருக்காதுகள், அவனுடைய நீண்ட கழுத்து, அகன்ற திருமார்பு - இவற்றைக் காணக் காண மனமும் கண்ணும் பெருமானிடத்திலே சென்றுவிட்டன. பெருமானுக்குப் பின்னே என் நெஞ்சு செல்கின்றது.

**ந**வதிருப்பதி எம்பெருமான்கள் ஒவ்வொருவரும் நம்மாழ்வாருக்கு ஓரோர் குணத்தைக் காட்டிக் கொடுத்தார்கள். அதிலே இந்தத் திருக்குளந்தை திருத்தலத்திலே 'சேஷ்டித ஆச்சர்யம்' என்கிற குணத்தைக் காட்டினான் எம்பெருமான். சேஷ்டிதம் - திருவிளையாடல். ஆச்சர்யம் - வியப்பு. வியப்பான திருவிளையாடல் என்பதை மாயக்கூத்தன் என்கிற பெயரே உணர்த்தி விடுகிறது. அவனிடத்திலே நமது மனத்தைப் பறிகொடுத்துவிட்டோமானால் ஆத்ம தரிசனம் ஏற்படும் என்பதைத்தான் இந்த திவ்ய தேசமும், அதன் வரலாறும், ஆழ்வார்களின் பாசுரங்களும் திரும்பத் திரும்ப உணர்த்துகின்றன.

'ஒரே பெருமானை எத்தனை நாழிகை இந்த ஆழ்வார் பார்த்துக்கொண்டிருப்பார்! வைகாசி உத்ஸவம் என்பது வருஷா வருஷம் வருவதுதானே? திருப்பதி பிரம்மோத்ஸவம் புரட்டாசி உத்ஸவம் எல்லாம் வருஷா வருஷம் வருபவைதானே?' என்று நமக்குத் தோன்றலாம்!







அவர்கள் பதில் சொல்வார்கள்!

ஆகவே நமது இந்த்ரியங்களும் மனமும் அடங்கு வதற்காக நவதிருப்பதிகளுள் ஒன்றான திருக் குளந்தை மாயக்கூத்தனைச் சென்று ஸேவிப்போம். இந்த்ரியங்களை அவன் திருமேனியில் வைத்தால் அவை அடங்கும். கண்கள் மாயக்கூத்தனை - அவன் திருமேனியைக் - காண வேண்டும், காதுகள் அவனு டைய கூத்தொலியைக் கேட்க வேண்டும், வாய் அவனுடைய ஆச்சரியமான சேஷ்டிதங்களைப் பேச

**திருக்குளந்தை திருத்தலத்திலே 'சேஷ்டித ஆச்சர்யம்' என்ற குணத்தைக் காட்டினான் எம்பெருமான்.**

நம்முடைய வாழ்க்கை அப்படி இல்லை. ஒவ்வொரு நாளும் புதுப்புது இடங்கள், புதுப்புது அனுபவங்கள் என்று பெறுகிறோம். ஆழ்வார்களைப் போலே ஒரே விஷயத்தில் கட்டிப் போடப்பட்டு இருப்ப தில்லை. ஆகவே, நம் வாழ்க் கையே மேலானது என்று நினைக்கத் தோன்றும்.

நம்முடைய இக்கருத்து ஆழ்வார்களுக்கு மிகவும் வேடிக்கையாக இருக்கும். ''நீங்கள் பார்க்கிற இத்தனை விஷயங்களுமே அந்தப் பெரு மான் அனுக்கிரஹத்தினாலே தான் உருவாகியுள்ளன. நீங்கள் அவற்றையெல்லாம் பார்க் கிறீர்கள்; நாங்களோ அவற்றை உருவாக்கிய அவனை மட்டுமே பார்த்து விட்டோம் என்பதால், மற்றதைப் பார்க்கத் தேவையில்லை. மற்றதைப் பார்க்கிற நீங்கள் எவ்வளவு பார்த்தாலும் திருப்தியே இல் லாமல் போகிறீர்கள்...'' என்று

வேண்டும். நாக்கு அவன் கொடுத்த துளஸியை ருசிக்க வேண்டும். அவன் திருமேனி பட்டு வரும் புஷ்பத்தையே மூக்கு முகர வேண்டும். இப் படி ஐம்புலன் களையும் அவனி டத்திலே செலுத்தி விட் டால், நம் பாபங் கள் தொலைந்து போகும்; விருப்பு - வெறுப்புகள் அற்றுப்போகும். புலன்கள் அடங் கும். மன அடக்கம் வரும். புலன்களும் மனமும் அடங்க ஆத்ம தரிசனம் ஏற்படும். நாம் அன்றாடம் தேடி அலையும் மனச்சாந்தி, மாயக்கூத்தன் வடிவிலே திருக்குளந்தையில் காத்துக்கொண்டிருக் கிறது.



(தேடுவோம்)

படங்கள்: **ஸ்ரீஹரி**

சித்திரங்கள்: **வேதா**



# மஹாபாரதம்
பேசுகிறது
ரூ. 600/-

# வால்மீகி ராமாயணம்
ரூ. 600/-

## ஹிந்து மஹா சமுத்திரம்
(3 பாகங்கள்)
ரூ. 600/-

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்
ரூ. 145/-

**சோ** எழுதிய

**இந்து தர்மம்** ரூ. 75/-

**எங்கே பிராமணன்?** ரூ. 125/-

**வெறுக்கத்தக்கதா பிராமணீயம்?** ரூ. 35/-

| | | | |
|---|---|---|---|
| 1. வந்தேமாதரம் | 115.00 | 20. சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 2. வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 | 21. எங்கே போகிறாய்? | 40.00 |
| 3. சர்க்கார் புகுந்த வீடு | 100.00 | 22. என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 4. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 | 23. இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 5. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 75.00 | 24. இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 6. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 40.00 | 25. சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 7. துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 | 26. சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 8. அதிகப் பிரசங்கம் | 45.00 | 27. ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 9. இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | 50.00 | 28. நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 10. யாரோ இவர் யாரோ? | 65.00 | 29. மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 11. சாதல் இல்லையேல் காதல் | 80.00 | 30. ஏன் கூடாது? | 40.00 |
| 12. மை டியர் பிரம்மதேவா | 30.00 | 31. இரவில் சென்னை | 40.00 |
| 13. இந்தியா எங்கே போகிறது? | 20.00 | 32. முகமது பின் துக்ளக் | 35.00 |
| 14. துக்ளக் கேள்வி - பதில் I & II | 100.00 | 33. உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 15. ஒண்ணரைப் பக்க நாளேடு | 40.00 | 34. சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 16. காமராஜை சந்தித்தேன் | 60.00 | 35. எதற்காக? | 35.00 |
| 17. புரட்சி கீதை | 35.00 | 36. உண்மையே உன் விலை என்ன? | 45.00 |
| 18. திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 | | |
| 19. யாருக்கும் வெட்கமில்லை | 40.00 | | |

**எஸ்.குருமூர்த்தி** எழுதிய — **தண்ணீர் விட்டோ வளர்த்தோம்** (3 பாகங்கள்) ரூ. 525/-

**பரத்வாஜ்** எழுதிய — **ஆட்சி முறை - ஒரு பார்வை** ரூ. 200/-

**கி.வா.ஜ.** எழுதிய

**தமிழ்ப் பழமொழிகள்** (4 பாகங்கள்) ரூ.400/-

**கி.வா.ஜ. பதில்கள்** (3 பாகங்கள்) ரூ. 165/-

**அபிராமி அந்தாதி விளக்கவுரை** (4 பாகங்கள்) ரூ. 300/-

**கந்தர் அலங்காரச் சொற்பொழிவுகள்** (6 பாகங்கள்) ரூ. 735/-

**தேவன்** எழுதிய

| | | | |
|---|---|---|---|
| 1. துப்பறியும் சாம்பு - நாடகவடிவம் | ரூ. 65.00 | 8. ஏன் இந்த அசட்டுத்தனம் | ரூ. 55.00 |
| 2. சொன்னபடி கேளுங்கள் | 54.00 | 9. விச்சுவுக்குக் கடிதங்கள் | 55.00 |
| 3. மல்லாரி ராவ் கதைகள் | 60.00 | 10. ராஜத்தின் மனோரதம் | 50.00 |
| 4. அப்பளக் கச்சேரி | 70.00 | 11. சீனுப்பயல் | 80.00 |
| 5. ராஜியின் பிள்ளை | 45.00 | 12. பார்வதியின் சங்கல்பம் | 60.00 |
| 6. போக்கிரி மாமா | 90.00 | 13. பல்லிசாமியின் துப்பு | 75.00 |
| 7. மனித சுபாவம் | 65.00 | 14. சின்னஞ்சிறு கதைகள் | 65.00 |
| | | 15. ரங்கூன் பெரியப்பா | 52.00 |



**அல்லயன்ஸ்** (நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
(டாக்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர் - 600 004

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி

**வாழ்க்கையின் அர்த்தம் எப்போது புரியும்?**

அர்த்தத்துக்குப் பொருள் என்று ஓர் அர்த்தம் உண்டு. ஆக, இரு பொருள்படப் பார்த்தால், வெறும் பொருளைக் குவிப்பதை விட்டுவிட்டு பரம்பொருளில் மனம் குவிந்தால் அர்த்தம் புரியும்.




● கிருஷ்ணராஜ் கோபால், சென்னை

**மோசமான நடிப்புக்கு ஆஸ்கார் கொடுக்கச் சொன்னால் நீங்கள் கர்ணனாவது யாரிடம்...?**

அந்தக் கர்ணனின் கவச குண்டலத்தை ஏமாற்றி அபகரிக்க கபடமாக மாறு வேடத்தில் வந்து, மோசமாக நடித்து மாட்டிக் கொண்ட இந்திரனுக்கு...

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

**சூடு கண்ட பூனை, ருசி கண்ட பூனை... என்ன வித்தியாசம்?**

யானைக்கும் பூனைக்கும் இடையே வித்தியாசம் உண்டு. ஆனால், பூனைகள் எல்லாமே ஒன்றுதான். சூடுக்கும் பயம், அதேசமயம் ருசிக்கவும் ஆசை. மதில் மேல் பூனை...!

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

**கணவனை இழந்த மனைவியின் நிலை, மனைவியை இழந்த கணவனின் நிலை... ஒப்பிடுக...**

கணவனை இழந்த மனைவி விதவை... மனைவியை இழந்த கணவன் அனாதை...

● ரா.பிரசன்னா, மதுரை

**இலக்கியத்தில் இலக்கணம் இருக்கும்... இலக்கணம் இலக்கியமாவது உண்டா...?**

மற்றவர்க்கு முன்னுதாரணமாக வாழ்ந்து காட்டிய இலக்கண புருஷன் ராமரின் கதை, ராமாயணம் என்னும் இலக்கியமானது... கிராமருக்குள் (Grammar) ராமர் இருக்கிறார்!

● சி.என். ரமாதேவி, சென்னை

**'மானம் கப்பலேறிப் போச்சு' என்கிறார்களே... ஏன் 'மானம்' வேறு எந்த வாகனத்திலும் ஏறாதா...?**

கப்பலேறும் மானத்துக்குக் கார் ஏற அவமானமாக இருக்கலாம். பிளேனில் ஏறினால், மானம் விமானம் ஆகிவிடுமே...! அட.... ஒண்ணு கவனிச்சீங்களா...!? பிளேனும் மானம்தான் ஏறும். Ok... இந்தப் பழமொழியை மானாவாரியா பிழிவோம். மானம் பொத்துக் கொண்டால் மழை. மழை தொடர்ந்தால் வெள்ளம். வெள்ளம் பெருகினால், கப்பலுக்குள் ஏறும். அப்புறம் எல்லாம் போச்சு. இப்ப திருப்தியா மேடம்...!

● ஜி. சுந்தரராஜன், வேளச்சேரி

**ஆசை என்பதன் பொருள் புரிகிறது... நப்பாசை என்றால் என்ன?**

தகுதிக்கு மீறி கொள்ளும் தப்பாசைதான் நப்பாசை!

● லலிதா செல்லப்பா, சென்னை

**கோழி போடும் முட்டைக்கும், பள்ளி வாத்தியார் போடும் முட்டைக்கும் என்ன வித்தியாசம்...?**

கோழி போட்டால் எக்கு (egg); வாத்தியார் போட்டால் மக்கு... கோழி முட்டை போட்ட காரணம் இனப் பெருக்கல்; வாத்தியார் முட்டை போட்ட காரணம் கோழிக் கிறுக்கல்...!

● அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்

**மூளை மாற்று சிகிச்சை வந்தால் என்ன ஆகும்...?**

நான் கேள்வி கேட்பேன். நீங்கள் பதில் சொல்ல, மாற்றிக்கொண்ட மூளையைக் கசக்கிக்கொண்டிருப்பீர்கள்...!

● ஹரிணி, பங்களூர்

**நேருக்கு நேர் 'சோதனை' இதனை, சந்திக்க நேர்ந்தால்...?**

கைகுலுக்குவேன்... சந்தோஷப்படுவேன்... எனது புது நாடகம் 'சாக்லேட் கிருஷ்ணா' பார்க்க அழைப்பேன். துக்ளக் ஆசிரியர் 'சோ'தனை...!

● சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

**எப்படிப் பார்த்தால் பசி தீரும்...?**

பசிமாறிக்கொண்டே பார்த்தால் பசி தீரும்.

- **மதுரை முருகேசன், தஞ்சாவூர்**

**தமிழில் உங்களுக்குப் பிடிக்காத வார்த்தை எது...?**

'போர்' ஆங்கிலத்தில் இதை 'வார்' (war) என்பார்கள். 'வார்' என்றால் தமிழில் வார்த்தல் அதாவது ஊற்றுதல்... ஆங்கிலத்தில் இதற்கு 'போர்' (Pour)...; வாரு போறுமே...

- **ஜமால், சிதம்பரம்**

**அந்தக் கால இளைஞர்களுக்கும் இந்தக் கால இளைஞர்களுக்கும் என்ன வேறுபாடு...?**

இந்தக் கேள்விக்குக் காலம்தான் பதில் சொல்ல வேண்டும்...!

- **ஜி.டச்சியப்பன், திருவண்ணாமலை**

**பெண்களின் சிரிப்பில் இருக்கும் 'காந்தம்', ஆண் களின் சிரிப்பில் இருப்பதில்லையே... ஏன்?**

பெண்களின் 'காந்த'ச் சிரிப்பால் ஈர்க்கப்படாத ஆண்களின் சிரிப்பில், 'ஏகாந்தம்' இருக்கும்.

- **ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்**

**வாஸ்து நம்பிக்கை உண்டா ஸ்வாமி...?**

ஸ்வாமி நம்பிக்கை உண்டு தோஸ்து...!

- **ரேவதிப்ரியன், ஈரோடு**

**பொய்கள் எத்தனை வகைப்படும்...?**

''பொய்கள் எனப்படுவது
யாதெனில் யாதொன்றும்
கையாலா காதால் கதை....''

# மனசை ஈர்க்கும் காந்தம்!



# “என் கவுண்ட்டவுன் ஸ்டார்ட்”

**நடிகர் ரித்தீஷ், காரை விட்டு இறங்கியதுமே ஏழைபாழைகள் வந்து சூழ்ந்து கொள்கிறார்கள். கனிவாக விசாரித்து அவர்களுக்குத் தேவையானவற்றை உடனடியாகச் செய்யச் சொல்கிறார். ரித்தீஷை நடிகராகப் பார்ப்பதைவிட மனிதாபிமானியாகவே எல்லோரும் பார்க்கிறார்கள். கல்லூரி மாணவிகள் அவருடன் நடத்திய சிட் சாட்!**

**ஜனனி:** ஒரே படம்தான் நடிச்சிருக்கீங்க. அடுத்தபடம் 'நாயகன்' இனிமேதான் ரிலீஸ். அதுக்குள்ள தமிழகம் முழுக்க இப்படித் தாறுமாறா பாப்புலரானது எப்படி?

**ரித்தீஷ்:** அன்புதான் காரணம். உதவின்னு என்னை நாடி வர்றவங்களுக்கு என்னால முடிஞ்சதைச் செய்றேன். யார் கிட்டேயிருந்தும் கொள்ளையடிச்சோ, ஏமாத்தியோ பணம் சேர்க்கலை. என் தொழில் மூலமா சம்பாதிச்சு ஏழைகளுக்கு ஹெல்ப் பண்றேன். போகும்போது எதை எடுத்துட்டுப் போகப் போறோம்! வாழும் போது அடுத்தவங்களுக்கு நம்மால முடிஞ்ச வரை உதவியா இருந்தா அதுவே போதும்.

**மீனாட்சி:** 'நாயகன்' படம் ஆரம்பிக்கும்போது 'ரமணா'தான் ஹீரோவா அறிவிக்கப்பட்டார். இப்ப ரிலீசாகும் போது நீங்க ஹீரோவானது எப்படி?

**ரித்தீஷ்:** உண்மைதான். ரமணாவை வைச்சு மொதல்ல பண்ணின கதை வேற. சில காரணங்களால் அதைப் பண்ண முடியாமப் போச்சு. அப்புறமா ரெடி பண்ணின கதை தான் 'நாயகன்'. ரெண்டு ஹீரோ சப்ஜெக்ட். நானும் ரமணாவும் ஹீரோ. இரண்டு பேருக்குமே ஈக்குவலான கேரக்டர்.

**லக்ஷ்மி:** உங்க தாத்தா சுப.தங்கவேலன் தமிழக அமைச்சர். நீங்களும் அரசியல்ல ஈடுபடப் போறதா கேள்விப்பட்டோமே...

**ரித்தீஷ்:** ஆமா. வரப்போற லோக்சபா எலெக்‌ஷன்ல தலைவர் கலைஞர்கிட்ட சீட் கேட்கப் போறேன். கொடுத்தா, இராமநாதபுரத்துல நின்னு தி.மு.க.வோட நம்பிக்கைக்குப் பாத்திரமா இருப்பேன்.

**ஜனனி:** அள்ளி அள்ளித் தர்றீங்களே... எங்கிருந்து உங்களுக்குப் பணம் வருது?

**ரித்தீஷ்:** யார், என்ன வேணா பேசட்டும். எனக்கு அதைப் பத்திக் கவலையில்ல. என் மனசுக்கு உண்மை தெரியும். நான் பி.இ. படிச்சு ஏகப்பட்ட பிசினஸ் பண்ணியிருக்கேன். இப்போ ரியல் எஸ்

டேட் தொழில்ல கொடி கட்டிப் பறக்கிறேன். நல்லா சம்பாதிக்கிறேன். என் தேவைக்குப் போக மத்ததை உதவின்னு கேட்டு வர்றவங்களுக்குத் தகுதி இருக்கான்னு பார்த்துச் செய்கிறேன்.

**மீனாட்சி:** இருக்கற சொத்தையெல்லாம் எடுத்து எடுத்துக் கொடுத்தா, உங்க மனைவி சும்மாவா விடறாங்க...

**ரித்தீஷ்:** அவங்க என்னைப் புரிஞ்சவங்க. இன்னொண்ணு, அவங்க தேவைகளையும் என் தேவையையும் பூர்த்தி செஞ்ச பிறகுதான் நான் அடுத்தவங்களுக்குச் செய்கிறேன். அதனால எந்தவிதத்திலும் நான் உதவி செய்றதுக்கு அவங்க தடையா இருந்ததில்லை.

**லக்ஷ்மி:** வெறும் நடிப்போடு சரியா, மத்த துறைகள்ல நுழையற ஆர்வம் இருக்கா?

**ரித்தீஷ்:** சினிமாவுக்கு ஆக்ஸிடென்ட்டா வந்தவன் நான். என் முதல் படமான கானல் நீரைப் பார்த்து, எத்தனை பேர் கதி கலங்கிப் போயிருப்பாங்கன்னு எனக்குத் தெரியும். ஆனா, அதுமாதிரி மோசமான படம் தர்றது அதோடு முடிஞ்சு போச்சு. 'நாயகன்'லேர்ந்துதான் என் கவுண்ட்டவுன் தொடங்குது. இந்தப் படத் துக்கு 40 லட்ச ரூபாய் சம்பளம் வாங்கினேன். எல்லாத்தையும் சினிமா இண்டஸ்ட்ரிக்கே உதவியா கொடுத்துட்டேன். காரணம், சினிமாவுல சம்பாதிச்சுதான் வாழணும்ங்கற நிலைமைல நான் இல்ல. என் பிசினஸுக்கு அப்புறம்தான் சினிமா. நடுவுல கிடைக்கற இடைவெளிலதான் படத்துல நடிக்கிறேன். அதனால நடிப்பு மட்டும் போதும். வேற எதுலயும் ஈடுபடற எண்ணம் இல்லை. இன்னொண்ணு, தயாரிப்பும், டைரக்ஷனும் ரொம்ப டார்ச்சரான வேலைங்க. அதுக்குப் பெரிய ஆளுமை வேணும். அது நம்மகிட்ட கிடையாது!

**ஜனனி:** எப்பவுமே நீங்க ஒரு க்ரூப்போட சுத்தறீங்களே... எதுக்கு இந்த பில்டப் எல்லாம்...?

**ரித்தீஷ்:** இது பில்டப் எல்லாம் இல்ல. எனக்கு அது அவசியமும் இல்ல. என் ஊர்ல இருந்து தினமும் குறைஞ்சது பத்துப் பேராவது என்னைப் பார்க்க சென்னைக்கு வந்துடறாங்க. நேரம் கருதி, நான் போற இடத்துக்கெல்லாம் அப்படியே அவங்களை வண்டில ஏத்திக் கூட்டிப் போய்ப் பேசி, தேவையானதைக் கொடுத்து அனுப்பிடறேன். அது வெளியில இருந்து பார்க்கறவங்களுக்கு பில்டப்பா தெரிஞ்சா, நான் என்ன பண்றது!

– மதுமிதா

படங்கள்: **விஜய் மணி**

## – நடிகர் ரித்தீஷ் பேட்டி





# கால் கிலோ காதல் அரை கிலோ கனவு

**வி**டுமுறை அறிவித்துவிட்டார்கள். சரியாக ஒரு மாதம். பத்தாம் வகுப்புக்குப் போகவிருக்கிற மாணவ - மாணவிகளுக்கு இருக்கவேண்டிய பொறுப்பு, அக்கறை குறித்தெல்லாம் ஹெட் மாஸ்டர் அறிவுரை சொல்லி அனுப்பி வைத்தார்.

பத்மநாபனுக்குக் கடந்த ஒரு மாத கால படிப்பு அனுபவமே அறுபது வயது வரை தாங்கும்போல் இருந்தது. என்ன ஆகிவிட்டது தனக்கு? பைத்தியம் பிடித்த மாதிரி பாடப் புத்தகங்களில் மூழ்கி முத்தெடுத்து, தேர்வெழுதித் தீர்த்ததற்கு, என்னவாவது பிரயோஜனம் இருக்குமா என்று இப்போது சந்தேகமாக இருந்தது. வெறுமனே படிக்கற பையனாக அடையாளம் காணப்படுவதில் பெரிய லாபங்கள் ஏதுமில்லை. தவிரவும், ஒரு மாறுவேடப் போட்டியில் மகாத்மா காந்தி வேஷம் போடுவது போலத்தான் அவன் தேர்வுக்குப் படித்திருந்தான். நிரந்தரமாக மகாத்மா காந்தியாகும் உத்தேசம் ஏதுமில்லை.

யோசித்துப் பார்த்தால், படிக்கிறேன் பேர்வழி என்று ஒருமாத காலத்தைத் தான் மிகவும் வீணாக்கிவிட்டது போலத்தான்

# ஜிலுஜிலு தொடர் கதை



## பா. ராகவன்

இப்போது தோன்றியது. வளர்மதியிடம் மேலும் முயற்சி செய்திருக்கலாம். 'என் காதலை ஏற்றுக்கொள்வதற்கு, ஏன் இத்தனை தயக்கம் காட்டுகிறாய்? என்னைப் பிடிக்கவில்லையா? அப்படியாவது சொல்லிவிடு. நான் ஆறுமுக தேவிக்கு பிராக்கெட் போடப் போகிறேன். ஒன்பதாம் வகுப்பு டி பிரிவில் படிக்கிறாள்; பார்க்க லட்சணமாக இருக்கிறாள்.'

இவ்வாறு புத்தி குதிரை வேகம் எடுத்து யோசிக்கத் தொடங்கியபோது படாரென்று பின்னந்தலையில் அடித்துக்கொண்டான்.

'சே! எத்தனை கெட்டவன் நான். புனிதமான என் காதலின்மீது நானே சாணி பூசுகிறேன்.'

அதேசமயம், ஆறுமுக தேவியின்மீது எப்போது தன் பார்வையும் புத்தியும் குவிந்தன என்றும் அவன் யோசிக்கத் தவறவில்லை. சென்ற வருடம்தான் பள்ளியில் புதிதாக வந்து சேர்ந்திருந்தாள். அவளது அப்பா காண்டீபனுக்கு பஸ் சர்வீஸில் கண்டக்டராக உத்தியோகம்.

வகுப்பில் ஒரு சில பையன்கள், ஆறுமுக தேவியின் அழகு குறித்து அவ்வப்போது குறிப்பிட்டிருக்கிறார்கள். பத்மநாபனும் ஒன்றிரண்டு சந்தர்ப்பங்களில் அவளைப் பார்த்தான். நன்றாகத்தான் இருந்தாள். ஆனால், வளர்மதியைவிடவுமா என்று சொல்லத் தெரியவில்லை. எப்படி இருந்தாலுமே தன் நினைப்பு அயோக்கியத்தனமானது என்று அவனுக்குத் தோன்றியது. மானசீகமாக வளர்மதியிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டு, வேகமாக தோட்டத்துப் பக்கம் போனான்.

ஒரு கோவைக்காயைக் கிள்ளி எடுத்துக்கொண்டு சுவரருகே சென்றான். மனத்துக்குள் இருக்கும் வளர்மதி, 'சீ போடா, சீ போடா' என்று எத்தனை முறை செல்லமாகத் திட்டியிருக்கிறாள்! ஒரு முறைகூட கோபித்துக்கொண்டதில்லை.

காதல் இல்லாமல் இது சாத்தியமா? நிச்சயம் இல்லை. ஆனால், சொல்வதற்குத் தயங்குகிறாள். யாருக்கோ பயப்படுகிறாள்.

'அன்பே, யாருக்கும் பயப்படாதே. என்னை நம்பு. நான் உன்னுடைய குடும்பி நாதன். வேண்டாத விடுமுறை மாதத்தில் என்ன செய்வதென்று தெரியாமல், பின்புறச் சுவரில் உன் திருமுகத்தை வரைந்து பார்க்கிற காதல் பைத்தியம். ஒரு வேளை நான் வரையும் உன் படம்

ஒழுங்காக வந்துவிட்டால், கீழே ஆர்ட் பை என்று என் பெயரை எழுதிவைப்பேன். சொதப்பி விட்டால், என் அப்பா பெயரை எழுதிவிடுகிறேன். இதோ கண்ணை வரைந்துவிட்டேன்; இதோ மூக்கு; இதோ தலைமுடி.

கடவுளே, ஒழுங்காக வந்துவிடும் போல் உள்ளதே! எனக்குள் உறங்கிக் கொண்டிருக்கும் கலைஞனை, நான் இந்த விடுமுறையில் அடையாளம் கண்டு கொண்டுவிட்டேனா?'

பத்மநாபனுக்கு அந்த விடுமுறையில் தான் முதல் முதலில் குமுதம் வாசிக்கக் கிடைத்தது. சாண்டில்யன் என்பவர் எழுதும் விஜய மகாதேவி படித்தால், முழுக்கப் புரி கிறது என்று சொல்ல முடிய வில்லை. ஆனாலும் படிக்க வேண்டும், படித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று எப்போதும் தோன்றியது.

பாழாய்ப்போன லதாதான் என்னமாய்ப் படம் போடுகிறார்!

அவன் திரும்பத் திரும்ப விஜய மகாதேவியைப் பார்த்துக் கொண்டே இருந்தான்.

லதாவைப் போல் ஒரு மாபெரும் ஓவியனாகிவிட வேண் டும் என்று வெஞ்சினம் கொண்டு, கையில் கிடைத்த தாளில் எல்லாம் வரைந்து பார்க்கத் தொடங்கினான். கண், மூக்கு, தலையெல்லாம் கூடப் பிரச்னை யில்லை. முக்கியமான சில விஷயங்கள் சரியாக வரமாட்டேனென்கிறது. சரியாக வராது போனால்கூடப் பிரச்னையில்லை. சமயத்தில் தனக்கே கொலை வெறி வரு மளவுக்கு அருபமாகிவிடுகிறது. சோகம் உடனே நெஞ்சைக் கவ்விவிடுகிறது.

படம் போடுவது கஷ்டம். கழுத்துக்குக் கீழே மிகவும் கஷ்டம். எனவே அவன் சுவரில் வரைய ஆரம்பித்த வளர்மதியின் படத்தை, கவனமாக முகம் மட்டும் என்று தீர்மானித்துக்கொண்டுதான் ஆரம்பித்தான். தவிரவும் வளர்மதியை வரைய நினைத்து விட்ட பிற்பாடு, முகத்தைத் தவிர வேறெதையும் நினைக்கப் பிடிப்பதில்லை.

பலவிதமான யோசனைகளுடன் அவன் சுவர்ப் படத்தில் மூழ்கியிருந்தபோது, சட்டென்று அம்மாவின் குரல் கேட்டது.

''சீ கழிசடை... புத்தி போவுது பாரு. நவுருடா, நவுந்து போ மொதல்ல.''

காதைத் திருகி அடிக்கும் பாவனையில் கை ஓங்கினாள்.

அந்தக் கணம் என்ன செய்வது என்று அவனுக்குத் தெரியவில்லை. அம்மா பார்த்து விட்டாள். ஒரு பெண்ணின் முகத்தை வரைந்துகொண்டிருக்கும் பிள்ளைகளைப் பொதுவாக அம்மாக்கள் விரும்ப மாட்டார்கள்.



என்ன செய்யலாம் என்று அவன் வேகவேகமாக யோசித்தான். இந்தக் கணம் அம்மா திட்டத் தொடங்கிவிட்டால் வேறு வினையே இல்லை. ஒருமாத விடு முறையையும் நரகமாகக் கழிக்க வேண்டி வந்துவிடும். எப்பப் பார், போலீஸ் மாதிரி வேவு பார்த்துக்கொண்டே இருப்பாள். சினிமாவுக்குக் கூடப் போக விட மாட்டாள். கடவுளே, காப்பாற்று.

''என்னடா வேல இது?''

''சும்மாம்மா. பொழுது போவல. அதான்...''

''பொழுதுபோவலன்னா படிக்க வேண்டியதுதான?''

''எல்லாம் படிச்சாச்சு. பரீட்சை எழுதி யாச்சு. இப்ப லீவு.''

''அடுத்த வருஷ பாடத்தப் படிக்க வேண்டியதுதான?''

சட்டென்று அவனுக்கு ஒரு யோசனை வந்தது. அடடே, சூப்பர்.

''எல்லாம் அப்புறம் படிச்சிக்கலாம். மொதல்ல இந்தப் படத்தப் பாரு. உன்ன மாதிரியே இல்ல?''

இது தூண்டில். அம்மா அவனைத் திட்டுவதை நிறுத்திவிட்டுப் படத்தைப் பார்த்தான்.

''நானா?''

''பின்ன? எனக்கு வேற யாரத் தெரியும்? நீதான்.''

அம்மாவுக்குப் புரிந்துப் போய்விட்டது. 'எங்கண்ணு' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

கடவுளுக்கு நன்றி. சுடர்மிகும் அறிவுடன் படைத்த கடவுள். தைரியமாகப் படத்தை வரைந்து முடித்து ஆர்ட் பை பத்மநாபன் என்று கையெழுத்தும் போட்டான். மாலை அப்பா வேலைவிட்டு வந்ததும், அவனே அழைத்து வந்து காட்டினான்.

''எப்படி இருக்கு?''

''நீயா வரைஞ்ச?''

''ஆமா. நல்லாருக்கா?''

''பரவால்ல.''

''என்ன பரவால்ல? நல்லாத்தான் வரைஞ்சிருக்கான்'' என்று பின்னால் இருந்து அம்மாவின் குரல் கேட்டது. ஏமாற்றிவிட்டது பற்றிய மெல்லிய குற்ற உணர்வு இருந்தாலும், அதுவும் சந்தோஷம் தரக்கூடியதாகவே இருந்தது. பத்தாம் வகுப்புக்குப் போய்விட்ட பிறகு இன்னுமேகூட நிறைய யோசனைகள் உதிக்கும்.

அன்று மாலை என்னவோ தோன்றி, சட்டென்று வளர்மதியின் வீட்டுக்குப் புறப்பட்டான்.

''எங்கடா கிளம்பிட்ட?'' என்று அப்பா கேட்டார்.

ஒரு கணம் யோசித்தான். ''வளர்மதி வீட்டுக்குப்பா'' என்றே சொன்னான்.

''எதுக்கு?''

''டென்த் புக்ஸ் அவ வாங்கிட்டாளாம். எங்க கிடைக்குதுன்னு கேட்டுக்கிட்டு வர்றதுக்குத்தான்.''

'ஓ' என்றார். அவருக்கு முன்னால் அடுத்த ஆண்டுப் படிப்பு குறித்து அவனே ஆரம்பித்துவிட்டதில், அவரது ஆன்மா நிச்சயம் அமைதியுற்றிருக்கும்.

பதிலுக்குக் காத்திருக்காமல் வேகமாக நடந்தான். வளர்மதி இருப்பாளா? எங்காவது சொந்தக்காரர்கள் வீட்டுக்குப் போயிருப்பாளா?

யோசித்தபடி சென்றவனுக்கு வழியிலேயே அதிர்ஷ்டம் அடித்தது. எதிர்பாராத அதிர்ஷ்டம்.

**(தொடரும்)**

**''இனி** என் பெயர் விக்னேஷ்வரன்'' என்கிறார் நடிகர் விக்னேஷ். காரணம் கேட்டால், ''நான் ரகுவரன் சாருக்குச் செய்கிற மரியாதை இது'' என்கிறார்.

''ஆமாம். அண்மையில் மறைந்த நடிகர் ரகுவரனின் நடிப்பால் ஈர்க்கப்பட்டவன் நான். அவருடைய ஒவ்வொரு அசைவும் நடிப்பின் இலக்கணம். ஒரு தந்தையாக, நண்பனாக, ஆசானாக அவர் எனக்கு இருந்தார். அவருடைய இறப்பு எனக்கு இழப்புதான்'' என்கிறார். ''இப்பொழுது நான் நடித்துக்கொண்டிருக்கும் 'குடியரசு' படத்தில் பத்திரிகையாளன் கதாபாத்திரம். இது என் திரையுலகின் திருப்புமுனையாக இருக்கும். அப்படித் திருப்புமுனையாக இருக்கும் படத்தில், அவர் பெயரோடு சேர்ந்து என் பெயரும் வருவதையே நான் பாக்கியமாகக் கருதுகிறேன். இனி என்னுடைய நடிப்பிலும் மாற்றத்தைக் காணலாம்'' என்கிறார்.

– **அனிதா**

# உடனடித் தேர்தலா... காங்கிரஸ்தான் பொறுப்பு!



**- சீறுகிறார் டி.ராஜா**

**அணுசக்தி ஒப்பந்த விவகாரத்தால் 'மத்திய அரசு இன்று கவிழுமா நாளை கவிழுமா' என்று டெல்லி அரசியலில் பரபரப்பு எகிறிக்கொண்டிருக்க, "முன்கூட்டியே தேர்தல் வந்தால் அதற்கு காங்கிரஸ்தான் பொறுப்பு" என்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியச் செயலாளர் டி. ராஜா. அவருடன் பேசியதிலிருந்து...**

**நேற்று (25.06.08) ஒருங்கிணைப்புக் குழு கூட்டத்தில் என்ன நடந்தது?**

"ஐக்கிய முன்னணி அரசு, அணுசக்தி இறுதி ஒப்பந்தத்துக்கு முன்னோடியாக, சர்வதேச அணுசக்தி ஆணையத்துடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளத் துடியாய்த் துடிக்கிறது. இந்திய அணு உலைகள் பாதுகாப்பு குறித்த ஒப்பந்தம் இது. இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டால், அமெரிக்க - இந்திய அணுசக்தி ஒப்பந்தம் நிறைவேற வாசலைத் திறந்துவிட்டது போல ஆகிவிடும். அதன் பிறகு அமெரிக்கா அதனுடைய வளையத்துக்குள் நம்மைக் கட்டிப்போட்டு விடும். எனவே, சர்வதேச அணுசக்தி ஆணையத்துடன் ஒப்பந்தம் கையெழுத்திடுவதை, முதலில் நிறுத்திவிடுங்கள் என்று உறுதியாக வலியுறுத்தினோம்."

**இந்த விஷயத்தில் எந்தவிதமான சமரசத்துக்கும் இடம் கிடையாதா?**

"இந்த ஒப்பந்தத்தின் மூலம், நமது வெளிநாட்டுப் பாதுகாப்புக் கொள்கைகளை அமெரிக்கா வடிவமைக்கும் நிலைமை உருவாகும். இதை எந்த விதத்தில் ஏற்றுக்கொள்ள முடியும்? மேலும், அமெரிக்காவுடன் ராணுவ அடிப்படையிலான ஒத்துழைப்பும் கொடுக்கவேண்டும். இதன் காரணமாக, அமெரிக்க ஆயுத வியாபாரிகளின் சந்தையாக இந்தியா மாற்றப்படும். மொத்தத்தில் இந்தியாவின் சுயசார்பையும், சுதந்திரத்தையும் பாதிக்கும் ஒப்பந்தம் இது. மன்மோகன் சிங், பிடிவாதமாக ஒப்பந்தம் நிறைவேற நடவடிக்கை எடுத்தால், விளைவுகளுக்கு அவர்தான் பொறுப்பு. குறிப்பிட்ட காலத்துக்கு முன் தேர்தல் மக்கள் மீது திணிக்கப்படுமானால் அதற்கும் காங்கிரஸே பொறுப்பு."

**இந்த விஷயத்தில் கருணாநிதியின் சமரச முயற்சி எந்த அளவுக்கு உதவும்?**

"எங்கள் இருவருடைய அடிப்படையும் மதவாத சக்திகள் ஆட்சிக்கு வரக்கூடாது என்பதுதான். மற்றபடி ஒப்பந்தம் குறித்த எங்கள் கருத்துக்கள், அவரும் ஏற்றுக்கொள்ளும்படிதான் இருக்கின்றன."

**நாலரை வருட காலம் ஆதரவு தெரிவித்துவிட்டு, தேர்தல் நெருங்கும்போது காலைவாரி விடுவது சரியா?**

"ஐ.மு. அரசை நாங்கள் ஆதரிக்க இரண்டு காரணங்கள். ஒன்று, பா.ஜ.க. ஆட்சிக்கு வரக்கூடாது. அடுத்து, குறைந்தபட்ச செயல்திட்டத்தில் சொல்லியபடி ஆட்சி நடத்த வேண்டும். குறைந்தபட்ச செயல்திட்டத்துக்கு முரணாக, பல நடவடிக்கைகள் கடந்த காலத்தில் எடுக்கப்பட்டபோது, நாங்கள் எங்கள் எதிர்ப்பைப்

பதிவுசெய்தோம். இந்த அரசு இத்தனை காலம் தள்ளியதே எங்களால்தான்.''

**இப்போது பணவீக்கம், விலைவாசி உயர்வு என்று ஆளும் கூட்டணிக்குப் பாதகமாகவே நிலைமை இருப்பதால், ஆதரவை விலக்கிக்கொள்வதன் மூலம் இடதுசாரிகள் தங்கள் செல்வாக்கைத் தக்கவைக்க முயற்சி செய்கின்றனரா?**

''கடந்த நான்கு வருட காலத்தில் பார்த்தால் மக்கள் பிரச்னைகளில் தொடர்ந்து நாங்கள் போராடிக்கொண்டிருக்கிறோம். பணவீக்கம், விலைவாசி உயர்வு போன்றவற்றுக்கு, மத்திய அரசின் தவறான பொருளாதாரக் கொள்கைகளே காரணம். நாங்கள் வெறும் போராட்டங்கள் மட்டும் நடத்தவில்லை. வியாபார வரிக் குறைப்புக்கும், பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தவும், நிறைய ஆலோசனைகள் சொல்லியிருக்கிறோம். எனவே, மக்கள் எங்களை அறிந்திருக்கிறார்கள்.''

**பணவீக்கம், விலைவாசி உயர்வு ஆகியவை குறித்த உங்கள் யோசனைகள் பரிசீலிக்கப்படாதது ஏன்?**

''சிறந்த பொருளாதார நிபுணர்களான மன்மோகன் சிங்கையும், ப.சிதம்பரத்தையும்தான் கேட்க வேண்டும். பணவீக்கம், விலைவாசி உயர்வு இரண்டையும், சந்தை சக்திகள் (market forces) பார்த்துச் சரிசெய்து கொள்ளும் என்று அரசு நினைக்கிறது. இந்தச் சந்தை சக்திகளை இயக்குவது, இந்தியாவை ஆட்டிப் படைக்கும் பெருமுதலாளிகள்தானே! ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் முதலாளியிடம், பொருளாதாரக் கொள்கைகளைத் தாரைவார்த்துவிட்டு, கைகட்டி வேடிக்கை பார்க்கிறார்கள் மன்மோகன் சிங்கும், ப. சிதம்பரமும். இவர்களது இந்தச் செயலுக்காக காங்கிரஸ் பெரிய விலை கொடுக்க இருக்கிறது. குறிப்பாக பொதுத்துறை நிறுவனங்களைத் தனியாருக்குத் தாரை வார்ப்பது, கண்டிக்கத்தக்கது. குறைந்தபட்ச செயல் திட்டத்தை அடியொட்டி நடந்திருந்தால், மன்மோகன் அரசு இப்படிப்பட்ட நிலைமைக்குத் தள்ளப்பட்டிருக்காது. இன்று நாடு முழுவதும், சாமான்ய மக்கள் தினசரி வாழ்க்கைச் செலவுகளைச் சமாளிக்கப் படாதபாடு படுகிறார்கள். இன்னொரு பக்கம் வேலையில்லாத் திண்டாட்டம் பூதாகாரமாக வளர்ந்து வருகிறது. குறுகிய தேர்தல் ஆதாயங்களுக்காக, எங்கள் கொள்கைகளை என்றைக்கும் மாற்றிக்கொள்ள மாட்டோம். மக்களுக்காகத் தொடர்ந்து போராடுவோம்.''

– ப்ரியன்

படங்கள் : ஸ்ரீஹரி



## மின்னல் கதை

# சிறுமை

**சீதா ராம்**

**வ**னிதா, காரை நிறுத்திவிட்டு இறங்கினாள். ஆறு மாதங்களுக்குப் பிறகு அனுமார் கோயிலுக்குள் அடியெடுத்து வைத்த போது, மீண்டும் ஒரு பரவச நிலை. முன்பு இருந்ததைவிட பக்தர்கள் நடமாட்டம் அதிகரித்திருந்தது. தெருவை ஒட்டி நிறுத் தப்படும் வாகனங்களின் எண்ணிக்கையும் கூடியிருந்தது.

வழிபாட்டை முடித்து வந்தவள், சுற்றும் முற்றும் பார்த்தாள். பூ மாலை விற்கும் அந்தச் சிறுவனைத் தவிர தெரிந்த முகம் ஒன்றும் இல்லை. அவனும், அவளைக் காணாததுபோல் பூ தொடுத்துக் கொண்டிருந்தான்.

முன்பெல்லாம் காலை, மாலை என இரண்டு வேளைகளில் வந்தபோதும், 'ஒரு மாலை ஐந்தே ரூபாய்!' என்று சொல்லிக் கொண்டே அவள் கார் ஏறும் வரை துரத்துவான்.

'அவங்க வாங்க மாட்டாங்க, விடுடா' என்று மற்றவர்கள் அவள் காதுபட சலிப் படைந்தாலும், அந்தப் பையன் மட்டும் விட்டதேயில்லை. அந்தப் பையனிடம் ஒன்றுமே வாங்கியதும் இல்லை.

ஆறுமாத இடைவெளியில் அந்தப் பையனுக்கு வனிதா முகம் ஒன்றும் மறந்திருக்காது. இருந்தாலும், கண்டு கொள்ளாமல் இருந்தது அவளைத் துன்புறுத்தியது. 'ஒரு சிறுவனுக்கு இவ்வளவு சுயமரியாதையா?' என்று எண்ணிக்கொண்டே அவன் அருகில் சென்றாள்.

''என்ன தம்பி, மாலைங்கள நீ முன்ன மாதிரி விக்கறதில்லையா? நான் வந்த தக்கூட நீ கவனிக்கல!''

வனிதா தானாகவே கேட்டாள்.

''இல்லக்கா! அப்ப என் தங்கச்சிக்குப் புத்துநோய் இருந்ததால, எங்களுக்குப் பணம் அவசியமா இருந்துச்சு! வைத்தியச் செலவுக்காக உங்கள மாதிரி பணக்காரங்ககிட்ட கத்திக் கத்தி விக்கப் பாத்தேன். தங்கச்சி இறந்து ரெண்டு மாசமாச்சு. பணத்துக்கே இப்ப அவசியமில்லாம போயிடுச்சு... நீங்க ரொம்ப நாளைக்கப்புறமா வந்திருக்கீங்க. ஒரு மாலை சாத்திட்டுப் போங்க...! காசு தர வேண்டாம்.''

பையன் பேசப் பேச வனிதாவுக்கு, தான் சிறியதாகிக்கொண்டே போன உணர்வு.






● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? 'காவல் துறையினர் கட்டப் பஞ்சாயத்துகளில் ஈடுபடக்கூடாது' என்று முதல்வர் கண்டிப்புடன் கூறியுள்ளாரே... இதைப் போலீஸார் காதில் போட்டுக்கொள்வார்களா?

! இப்படி கண்டிப்புடன் கருணாநிதி கூறவேண்டிய சூழ்நிலை உருவாகியிருப்பதே, காவல் துறை எந்த அளவுக்குச் சீரழிவைக் கண்டிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டுவதாக உள்ளது. இந்தச் சீரழிவை உருவாக்கியதில் அரசியல்வாதிகளுக்குத்தான் பெரும் பங்கு உண்டு என்பதால், கருணாநிதியின் வேண்டுகோள் செவிடன் காதில் ஊதிய சங்காக மாறவே வாய்ப்பு அதிகம்.

## ராமதாஸ் - கருணாநிதி

# யாருக்கு இப்போது நிம்மதி?

● வி.எம்.செய்யது புகாரி, அதிராம்பட்டினம்

? தி.மு.க. உறவைத் துண்டித்த ராமதாஸ், இனி அ.தி.மு.க.வுக்குத் தூண்டில் போடுவாரா?

! இவர் போடமாட்டார். ஜெ. போடுவார்; இவர் சிக்குவார். இருக்கவே இருக்கிறது. 'அரசியலில் நிரந்தர நண்பர், நிரந்தர எதிரி என்பது கிடையாது' என்கிற அறிக்கை.

● கே.ஏ.காளிமுத்து, காரை அஞ்சல்

? 'ஹிந்து திருமணச் சட்டம், குடும்பங்களைப் பாதுகாப்பதற்குப் பதிலாக, உடைக்கிறது' என உச்சநீதி மன்றம் கருத்து தெரிவித்துள்ளது பற்றி..?

! அதிகரித்து வரும் விவாகரத்து வழக்குகள் தொடர்பாகப் பேசப்பட்ட கருத்து தானேயொழிய, தீர்ப்பு அல்ல. நிறைய விவாகரத்துகளுக்குக் காரணம் சமுதாய விழிப்புணர்வே. ஆண் - பெண் இருவருமே போராடி பெறப்பட்ட உரிமைகளை உணர்ந்திருப்பதுடன், சுயமரியாதை - சுதந்திரத்தை விட்டுக் கொடுக்கத் தயாராயில்லை. சட்டம், உரிமைகளைப் பாதுகாக்க ஏற்பட்டதுதானே!

● மஞ்சுதேவன், அமிரோலி

? சமீபத்திய சுதாய்ப்பு?

! கலைஞரைப் பார்த்து, 'கைது செய்; காத்திருக்கிறேன்' என்று கூட்டணி வெட்டி குரு பேசியிருப்பது!

● வே.நா.கதிர்வேல், வேலூர் - 6

? 'ராமருக்குப் பெருமை சேர்க்கும் வகையில், நாடு முழுவதும் ராமர்





* அழிக்கும் அறிவிப்பு!

**கோயில்களைக் கட்ட வேண்டும்' என்கிறாரே அத்வானி? கோயில்கள் கட்டுவதால் மட்டுமே ராமருக்குப் பெருமை சேர்ந்துவிடுமா என்ன?**

! கோயில்கள் கட்டி வழிபடுவதால் நமக்குத்தான் நன்மை; கடவுளுக்கு அதில் பெருமை ஏதும் இல்லை. நிற்க; அடுத்த கட்டமாக அத்வானி, 'அவரவர் மனத்திலேயே ராமருக்குக் கோயில் கட்டி மகிழுங்கள்; ஏற்கெனவே உள்ள புராதன கோயில்களை நன்கு பராமரிப்போம்' என்று அறிவித்து, அமைதியான பக்திப் புரட்சிக்கு வித்திடலாம்!

● **த.புகழேந்தி, கூகூர்**

? **மேற்கு வங்கத்தைப் பிரித்து, கூர்க்காலாந்து என்று தனி மாநிலத்தை அமைக்க முடியாது என மத்திய அரசு திட்டவட்டமாகக் கூறியிருப்பது பற்றி...?**

! தென்னையும் பனையும் கிளைவிடக் கூடாதுதான். ஆனால், மொழிவாரி மாநிலம் என்று ஆரம்பித்தபோதே குறுகிய பிரதேசப் பித்து தொடங்கிவிட்டதே! படிப்படியாக அதிகரித்தும் வருகிறதே! தேசிய உணர்வு தேய்ந்து ஓடாகிறதே! 'கூர்க்காலாந்து என்று பிரிக்க முடியாது' என இப்போது கூறும் அரசு, இரண்டு துப்பாக்கிச் சூடு, பத்து - இருபது பேர் மரணம் என்ற பிறகு மனம் மாறும். - இது தொடர் கதை. இந்தியாவைப் பனை மரமாக எண்ணாமல் ஆலமரமாகக் கருதவேண்டியதுதான்!

● **டேவிட் ராஜா, சென்னை - 114**

? **நேசத்தைத் தாக்கவல்ல கிருமி எது? மருந்துவம் எது?**

! கிருமி - மிகையான ஈகோ; மருத்துவம் : அந்த ஈகோ எவ்வளவு அல்பமானது என உணர்தல்.

● **எம்.சிவசண்முகம், திருப்பூர்**

? **ராமதாஸ் - கருணாநிதி இருவரில் யாருக்கு இப்போது நிம்மதியாய் இருக்கும்?**

! இருவருக்குமே நிம்மதி இல்லை. காரணம், 1) கருணாநிதி மீது ராமதாஸின் தாக்குதல், தோழமைக் கட்சி என்ற கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டுப் பாயும். 2) அன்புமணி மீது தமக்கு அன்பு உண்டு என்று கலைஞர் கூறியபோதிலும், டெல்லியில் அன்புமணிக்கு விரோதிகள் அதிகம். ஒரு பாதுகாப்புக் கவசத்தை அவர் இழந்துவிட்டிருக்கிறார். மேலும், மத்தியில் ஆட்சி ஆட்டம் காணத் தொடங்கிவிட்டதே!

● **எம்.ராஜேந்திரன், லால்குடி**

? **உலக சாதனையாக, சென்னையில் ஒரு நாளில் 44 லட்சம் பேர் பஸ்ஸில் பிரயாணம் செய்கிறார்களாமே?**

! படியில் தொற்றியவாறு, ஒரு கையில் கம்பியையும் மறு கையில் உயிரையும் பற்றிக்கொண்டு செல்வதை சாதனை என்பதா, சோதனை என்பதா? 44 லட்சம் பேரின் வேதனை என்பதும் ஒரு சாதனைதானே என்றால், ஏற்க வேண்டியதுதான்!

● **எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

? **'இஸ்லாமிய பயங்கரவாதத்தை முறியடிக்க, ஹிந்து தற்கொலைப் படைகள் உருவாக்கப்பட வேண்டும்' என்று சிவசேனா தலைவர் பால் தாக்கரே மிரட்டியுள்ளாரே?**

! தாக்கரே வெளியிட்டுள்ள மற்றுமொரு கண்மூடித்தனமான அறிவிப்பு! அது இஸ்லாமிய பயங்கரவாதத்தை முறியடிப்பதற்குப் பதிலாக, ஹிந்து மதத்தையே அழிக்கும் விபரீதமாகத்தான் முடியும்.

● பி.பத்மா, அரங்கநாதபுரம் ★

*? ஒரு டீ.வி. விவாத மேடையில், 'தமிழில் படித்தால் வேலை உறுதி என்றால் படிக்கிறோம்' என்று ஒரு பெண் பேசினார். அப்துல் கலாம் போன்ற மேதைகள் பலர், தமிழில் படித்தவர்கள் தானே?*

! அப்துல் கலாம் போன்றவர்களுடன் சராசரி மக்களை ஒப்பிடக்கூடாது. மிகப் பெரும்பாலான இளைஞர்கள், படித்து முடித்தவுடன் ஒரு வேலையில் ஈடுபடவோ அல்லது முடிந்தால் சொந்தத் தொழில் தொடங்கவோதான் விரும்புவார்கள். கல்வித் திட்டம் அவர்களுக்கு உதவும் வகையில் அமைவதே நல்லது. இதில் தமிழ்ப்பற்று, ஆங்கில எதிர்ப்பு போன்றவற்றுக்கு இடமில்லை. யதார்த்த நோக்கில் கல்வித் திட்டம் அமைய வேண்டும்.

● ஆர்.மாதவராமன்,
கிருஷ்ணகிரி

*? கூட்டணியிலிருந்து பா.ம.க. வெளியேற்றம் என்ற தி.மு.க. உயர்நிலைக் குழுவின் முடிவு, தராசாரின் பார்வையில் ...?*

! ஆர அமர யோசித்து எடுத்த, தவறான முடிவு!

● ஏ.எஸ்.யோகானந்தம்,
கலிங்கியம்

*? 'நான் ஆஸ்கார் விருது வாங்குவதை விட, வெள்ளைக்காரர்கள் நம் நாட்டுக்கு வந்து விருது வாங்க வேண்டும். அதை என் வாழ்நாளில் பார்த்துவிட்டுத்தான் போவேன்' என்று கமலஹாசன் கூறியிருப்பது பற்றி?*

! அழகான அவர் கனவு நிறைவேற வேண்டுமானால், கோலிவுட்டும் பாலிவுட்டும் வெறும் கனவுத் தொழிற்சாலைகளாக உள்ள நிலையிலிருந்து கலைத் தொழிற்சாலைகளென்ற நிலைக்கு உயர வேண்டும்.

● சி.சுரேஷ், திருச்சிற்றம்பலம்

*? பல உலக அளவு விளையாட்டுகளில், இந்தியா தகுதிச் சுற்றுப் போட்டிக்கே தேர்வாவதில்லையே... இது பற்றித் தங்கள் கருத்து...?*

! இந்திய பெண்கள் ஹாக்கி அணி, மேனேஜரும் கோச்சும் இல்லாமலே சர்வதேசப் போட்டிக்குப் புறப்பட்டுப் போயிருக்கிறது. அப்பொறுப்புக்கு நியமிக்கப்பட்ட நபருக்கு விடுப்பு கிடைக்கவில்லையாம்! இப்படித்தான் பல விளையாட்டுகளையும் அலட்சியமும் அரசியலும் பீடித்துள்ளன.

✱ லேட்டஸ்ட் சதாய்ப்பு!



**ரூ.100 பரிசு பெறுபவர் :**
**எம்.சிவசண்முகம்,**
**திருப்பூர்**

**ரூ.50 பரிசு பெறுபவர் :**
**பி.பத்மா,**
**அரங்கநாதபுரம்**



✱ திருத்திய அஜெண்டா!

''வெள்ளிக்கிழமை பெண் பார்க்க வரலாமான்னு பெண் வீட்டுக்கு ஃபோன் பண்ணிக் கேளுங்க'' - ஜெயா கணவரிடம் சொல்லும்போது மாதவன் உள்ளே வந்தான்.

''மாதவா, வெள்ளிக்கிழமை லீவு

சரஸ்வதி ராசேந்திரன்



# ரொம்ப

போட்டுட்டுப் போலாமாடா?'' என்றதும் ''போலாம்ப்பா'' என்ற உற்சாக சிக்னல் உடனே வந்தது. ராமசாமி ஃபோன் போட, எதிர்முனையில் எதிர்பாராத வகையில் பெண்ணே ஃபோன் எடுக்க, ''ஒண்ணுமில்லேம்மா வர்ற வெள்ளிக்கிழமை பெண் பார்க்க வரலாமானு உங்க அப்பா, அம்மாகிட்டே கேட்கத்தான் பண்ணினேன்'' என்று சொல்ல-

''ஸார்! உங்க பையன்கிட்ட கொஞ்சம் பேசணும் முதல்ல அவரை அனுப்ப முடியுமா?'' - அந்தப் பெண் கேட்டாள்.

அதிர்ந்துபோன ராமசாமி விஷயத்தை ஜெயாவிடம் சொல்ல, ''என்ன இது! இப்படிப் பேசுகிறாள்!'' என்று திடுக்கிட்டவளிடம், ''அம்மா, அவள் வேலை பார்ப்பவள், இந்தக் காலத்துப் பெண். நீங்கள் ஏன் அதிர்ச்சியடைகிறீர்கள். நான் பார்த்துக்கிறேன்'' என்று சமாதானம் சொன்னான் மாதவன்.

**மா**தவன் மட்டும் பெண் பார்க்கப்போனான்.

திரும்பி வந்தவனை பெற்றோர்கள் துளைத்தெடுத்தனர். அவனும், அவளும் பேசிய விவரங்களைச் சொன்னான்.

''மிஸ்டர் மாதவன் நம்ம

## வாசகர்கள் கவனத்துக்கு!

**க**ல்கி மே 25, 2008 இதழில், **கலங்கி நிற்கும் கலைக் குடும்பம்** என்ற தலைப்பில், சியாமா சாஸ்திரியின் சந்ததியினர் சிலர் வறுமையில் வாடுவதாகச் செய்தி வெளியிட்டிருந்தோம். அந்த இசை மேதையின் நான்காவது தலைமுறையினருக்கு உதவ விரும்புவோர், தாங்கள் அளிக்க முன் வரும் தொகையை Aradhana Committee - Syama Sastri Family Fund என்ற பெயருக்கு காசோலை அல்லது டி.டி.யாக அனுப்பலாம் என்று குறிப்பிட்டிருந்தோம். இதில் ஒரு சிறு திருத்தம் செய்யுமாறு தற்போது ஆராதனா கமிட்டி கேட்டுக்கொண்டிருக்கிறது. **'Syama Sastri Family Fund' என்ற சொற்களைத் தவிர்த்து Aradhana Committee என்ற பெயருக்கு மட்டுமே** தங்கள் காசோலை அல்லது டி.டி.யை அமைக்க வேண்டும்; அல்லது உரிய முறையில், திருத்தி எழுதியனுப்ப வேண்டும். தாங்கள் அனுப்பும் தொகை, சியாமா சாஸ்திரி குடும்ப நிதிக்கானது என்பதைத் தனிக் கடிதத்தில் குறிப்பிடவும். இக்கடிதத்துடன் தங்கள் டி.டி. அல்லது காசோலையை ஆராதனா கமிட்டி, 3, ராயல் என்கிளேவ், அடையாறு, சென்னை - 600 020 என்கிற முகவரிக்கு அனுப்பவும். வங்கி விதிகள் கோரும் இத்திருத்தம் காரணமாக, வாசகர்களுக்கு சிரமம் தந்ததற்கு வருந்துகிறோம். உதவ முன்வந்த நல்ல உள்ளங்களை மனம் நிறைந்து வாழ்த்தி வணங்குகிறோம்.

சியாமா சாஸ்திரியின் வழித்தோன்றல் (கொள்ளுப் பேத்தி தேவகியின் மகன்) குமார் முகவரி :

*வி.குமார்,*
*2, முதல் குறுக்குத் தெரு,*
*முத்தமிழ் நகர்,*
*சிட்லபாக்கம், சென்னை - 64*

மேற்படி முகவரிக்குத் தங்கள் உதவித் தொகையை நேரடியாகவும் அனுப்பலாம்.

**- ஆசிரியர்**

கல்யாணத்துக்குப் பிறகு உங்க அப்பா, அம்மா எங்கே இருப்பாங்க!'' - அவள்.

''ஏன்? என்னோடதான்.''

''நோ, நம்ம வாழ்க்கையை நாம ரெண்டு பேர்தான் ஷேர் பண்ணிக்கணும்.'' - அவள்.

# தேங்ஸ்!

''அப்ப, உங்க அப்பா, அம்மா?'' - அவன்.

''எப்போதாவது கெஸ்ட் மாதிரி வருவாங்க.'' - அவள்.

''உங்களுக்குச் சமைக்கத் தெரியுமா?'' - அவன்.

''உனக்குத் தெரியாதா?'' - அவன்.

''நானும் வேலை பார்க்கிறேன். வீடு திரும்பினா, டையர்டு ஆயிடும். என்னால சமைக்க முடியாது. அப்படியே சமைக்கணும்னா வேலைய ஷேர் பண்ணிக்கணும்.'' - அவள்.

''வெல்டன்! அப்புறம் என்ன கேள்வி இருக்கு மிஸ்'' - அவன்.

''உடனடியா பிள்ளை பெத்துக்க முடியாது. நாலைந்து வருஷம் கூட ஆகலாம்'' - அவள்.

''**அ**டப்பாவி. பெண்ணா வளர்த்துருக்காங்க. என்னடா அநியாயம் இது'' ஜெயாவும், ராமசாமியும் அலறி, ''நீ என்னதான்டா சொன்னே?''

''**தே**ங்ஸ்! ரொம்ப சந்தோஷம்! இவ்வளவு போல்டா பேசினதுக்கு. அதுவும் கல்யாணத்துக்கு முன்னாடியே பேசினதுக்கு. உங்க சந்தோஷமும், என் குடும்ப நிம்மதியும் பறிபோகாம காப்பாத்தியது நம்ம பேச்சு. ரொம்ப தேங்ஸ். நல்ல கணவர் கிடைக்க வாழ்த்துகள்!'' ●

# மணி, மந்திரம், ஔஷதம்

***புஷ்பராகம், பத்மராகம், கோமேதகம், வைரம், வைடூரியம், இந்திர நீலம், முத்து, மரகதம், பவழம், இவை ஒவ்வொன்றால் ஆன வெளிப் பிரகாரங்களை உடைய 'சிந்தாமணி கிருஹம்' என்ற அற்புதமான கோட்டையில் அம்பிகை தன்னை பாதுகாத்துக் கொள்ள வாசம் செய்கிறாள் என்று 'சௌந்தர்ய லஹரி' என்ற மந்திர சாஸ்திரமாக போற்றப்படும் நூலின் எட்டாவது பாடலில் கூறப்பட்டுள்ளது. தன்னை பாதுகாத்துக் கொள்ள தேவியே டன் கணக்கில் இரத்தினங்களை உபயோகிக்கிறாள் எனில் பாமரர்களாகிய நாமும் ஏன் அவற்றை உபயோகிக்கக் கூடாது?***

எனது முப்பது வருட டாக்டர் தொழிலில், எந்த நோயாளிக்காவது ஆறு மாதத்திற்கு மேலாக வைத்தியம் செய்தும் பலனளிக்காத கேசுகளில் அவருக்கு ஏற்ற இரத்தினங்களை அணியச் செய்ததில் நல்ல குணம் கிடைத்தது. உதாரணமாக 2, 11, 20, 29 தேதிகளில் பிறந்தவர்கள் அல்லது பிறந்த தேதி, மாதம், வருடம் ஆகியவற்றை கூட்டி வரும் எண் 2 என்றாலும். தவிர, ஜூன் 21 - ஜூலை 20 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களும் 2-ம் எண்காரர் எனப்படுவர். இவர்களுக்கு அநேகமாக ஜீரணக் கோளாறுகள் இருக்கும். எந்த மருந்தும் பலனளிக்காது. ரூ.780 விலையுள்ள 'சைனீஸ் ஜேட்' என்ற இரத்தினத்தை அணிந்த பிறகு அவர்களது வயிறு தொந்தரவு நிரந்தரமாக குணமாகியது.

இதேபோல் 3, 12, 21, 30 தேதிகளில் பிறந்தவர்கள் (அல்லது பிறந்த தேதி, மாதம், வருடம் ஆகிய மூன்றையும் கூட்டினால் மூன்று ஆக வந்தாலும்) தவிர பிப்ரவரி 20 - மார்ச் 20 அல்லது நவம்பர் 21 - டிசம்பர் 21 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களையும் 3-ம் எண்காரர் என்கிறோம். இவர்களுக்கு தலைவலி வந்தால் அது எந்த மருந்துக்கும் கட்டுப்படாது. 'எமிதிஸ்ட்' என்ற இரத்தினம் (ரூ.1500)அணிய தலைவலி இருந்த இடம் தெரியாமல் குணமாகி விடுவது பலரது அனுபவம்.

கான்சர் நோய் சீரியஸாகி சில வாரங்களே உயிர் வாழ்வாள் என்று சொல்லப்பட்ட ஒரு பெண்மணி வைடூரியம் (ரூ.3,800) மற்றும் மரகதம் (ரூ.4,600) அணிந்த பின்பு எழுந்து நடமாட ஆரம்பித்தாள். பவழம் (ரூ.2,800) அணிந்த பின்பு பிரிந்த தம்பதிகள் ஒன்று சேர்ந்தனர். வெண் பவழம் (ரூ.1,500) மற்றும் புஷ்பராகம் (ரூ.4,800) அணிந்து கொள்ள, சர்க்கரை வியாதி (டயபிடீஸ்) குறைந்தது. இதுபோல் தாமதமான பதவி உயர்வு கோர்ட் விவகாரம் சுமுகமாக முடிந்தது. தீராத வியாதிகள் குணமானது. நீண்ட நாட்களான பிரச்சினைகள் தீர்ந்தது போன்றவை நான் அனுபவத்தில் பார்த்துள்ளேன்.

*நவரத்தினங்களை அணிந்து பலன் ஏதும் ஏற்படவில்லை என பலர் சொல்வதற்கு நகைக் கடையில் இரத்தினங்களை வாங்கி சுத்தி செய்யாமல் அணிவதே காரணம். இரத்தினங்களை சுத்தி செய்து அணிவது மிக அவசியம்.*

முத்து அணிந்த பிறகு மலச்சிக்கல் மற்றும் கோமேதகம் (ரூ.2,300) அணிந்த பிறகு அலர்ஜி குணமாகியது. பவழம், நீலம் (ரூ.4,800), லாபிஸ் லஸுலி (ரூ.480) அணிந்த பிறகு பல வருட தோல் வியாதிகள் குணமாகியது. கன்னிப்பெண்கள் பவழம் அணிய திருமணம் கைகூடியது. நீலக்கல் + புஷ்பராகம் + பவழம் அணிய, வியாபாரம் இலாபகரமாக நடைபெற்று வர தொடங்கியது.

செல்வராஜ் சங்கீதத்தில் புலமை உள்ளவர். ஆனால் சான்ஸ் ஏதும் கிடைப்பதாக இல்லை. 'அகேட்' (ரூ.1,200) என்ற இரத்தினம் அணிந்த பின் இன்று இலண்டன் நிலையத்தில் இசையமைப்பாளராக இருக்கிறார். அருண்குமார் நல்ல ஓவியர். ஆனால் ஒன்று கூட விற்கவில்லை. அகேட் அணிந்த ஆறே மாதத்தில் நிறைய விற்பனையாகி இன்று கார், பங்களா என்று இருக்கிறார். இராமசாமி நடத்தி வந்த லாரி சர்வீஸ் பலத்த நஷ்டம். காரணம் அடிக்கடி நடந்த லாரி விபத்து. 'டர்க்வாய்ஸ்' இரத்தினம் (ரூ.480) ஒவ்வொரு லாரியின் டீசல் டாங்க்-ல் போட அதன் பிறகு விபத்து நிகழவில்லை.

நமது வாழ்க்கைப் பிரச்சினை, ஏழ்மை நீங்க முதலில் 'மணி'யின் (இரத்தினங்களின்) உதவியை நாட வேண்டும். இது பலனளிக்காத பட்சத்தில் மட்டுமே மந்திரங்களை உச்சாடனம் செய்ய வேண்டும். இதுவும் பலனளிக்காத ஒரு சில கேசுகளில் மட்டுமே 'மருந்து' என நம் முன்னோர் ''மணி, மந்திரம், ஔஷதம்'' என வரிசைப் படுத்தி வைத்துள்ளனர்.

ஆம்! உலகில் உள்ள எல்லா நல்ல சக்திகளையும் (கடவுளின் பலம், சக்தி உட்பட) நவரத்தினக் கற்கள் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டுள்ளன. இவற்றை அணிய, நம்மிடம் உள்ள தேவையில்லாத சுபாவங்கள், மற்றவர்களுக்கு பிடிக்காத செயல், தன்னம்பிக்கையின்மை போன்ற தன்மைகள் உறிஞ்சப்பட்டு வெளியேற்றப்படுகின்றன.

2-3 லட்சத்திற்கு கார், வீடு வைத்திருப்பதால் நமது வருமானம் அதிகரிக்காது. இவற்றால் அடிக்கடி செலவு நிச்சயம் உண்டு. செலவு ஏதும் வைக்காமல் பண வரவு, சௌகர்யங்கள் ஆகியவற்றை (மறைமுகமாக) தொடர்ந்து கொடுத்துக் கொண்டேயிருப்பது இரத்தினக் கற்கள் மட்டுமே!

**உங்களுக்கேற்ற இரத்தினம் பெற்றுக் கொள்ள ஜாதகம் அல்லது பிறந்த தேதியுடன் நேரில் (காலை 10 முதல் 2 மணி வரை மட்டும்) அணுகவும். கட்டணம் ரூ.200=00**

**Dr. V. கிருஷ்ணமூர்த்தி**
Flat No. 001, Ground Floor
Building No. 9, Shanthi Park Apts.,
Jayanagar - 9th Block
Bangalore - 69
Phone: (080) 3292 2523

**AT CHENNAI**
"RAMAN HOUSE"
Old No. 21, Kuppiah Street,
West Mambalam,
Chennai (Madras) - 33
Phone : 6539 3214

**எமது வெளியீடுகள் (தமிழ் புத்தகங்கள்)**

வாழ்க்கைப் பிரச்சினைகள் நீங்க இங்கிலாந்து மலர் மருந்துகள் (பாகம் 1 to 18) ரூ.750=00

தியானம் செய்யும் முறை ... ... ... ... ... ... ... ... ... ரூ.70=00

**சென்னை விலாசத்திற்கு M.O. செய்யவும். தபால் சிலவு இலவசம். V.P.P. இல்லை.**

Advt

# "இங்கிலாந்து மலர் மருந்துகள்"



(கண்டு பிடித்தவர்: எட்வர்டு பாட்ச் என்ற M.B.B.S., M.R.C.S., படித்த இலண்டன் மாநகர அல்லோபதி டாக்டர்.)

மொத்தம் 38 மருந்துகள். ஒவ்வொன்றும் இங்கிலாந்து காடுகளில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டுமே காணப்படக்கூடிய மலர்களிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இப்பூக்களில் பல இந்தியாவில் காணப்படவில்லை. இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டு மாத்திரை வடிவில் விற்பனை செய்கிறோம். எவ்வயதினராயினும் வேளைக்கு ஒரு மாத்திரை சுவைத்து எப்போது வேண்டுமானாலும் சாப்பிடலாம். மேற்சொன்ன 38 மலர் மருந்துகளில் செஸ்ட்நட்பட், கார்ஸ், ரெட் செஸ்ட்நட், ஸ்வீட் செஸ்ட்நட், வாட்டர் வயலட் என்ற மருந்துகள் பற்றி கீழே பார்ப்போம்.

நீச்சல் கற்க தண்ணீரில் முதலில் இறங்க வேண்டும். வீட்டில் உட்கார்ந்து கேள்வி கேட்டு நீச்சல் கற்க முடியாது. இதேபோல் மலர் மருந்துகள் பற்றி தெரிந்து கொள்ள அவற்றை சாப்பிட்டுப் பார்த்தால் மட்டுமே தெரிந்து கொள்ள முடியும். வேறு வழியில்லை.

மலர் மருந்துகளை மற்றவர்கள் எப்படி உபயோகிக்கிறார்கள் என கீழே பார்ப்போம்.

**வாட்டர் வயலட்:** பண்டிகைகள் கடவுளால் உண்டாக்கப்பட்டவை. பணம் இல்லாவிட்டாலும் கடன் வாங்கியாவது தீபாவளி கொண்டாட வேண்டும் என்பது நியதி. கடவுள் நமக்கு நிறைய கொடுக்கத்தானே வேண்டும்? பண்டிகைக்கு செலவு செய்யும்படி வைத்தால் அந்த பணம் திரும்ப கிடைக்கும்படி செய்ய வேண்டுமல்லவா? ஆனால் நடைமுறையில் அவ்வாறு நடப்பதில்லை. இஃது ஏனெனில் பண்டிகையை கொண்டாடுவது எப்படி என நமக்கு தெரியாமல் போய்விட்டது தான். 'வாட்டர் வயலட்' என்ற மலர் மருந்து தீபாவளிக்கு ஒரு வாரம் முன்பும் பின்பும் தினம் ஒரு மாத்திரை சாப்பிட்டு வர, தீபாவளிக்கு செலவழித்த பணம் ஏதோ ஒருவிதத்தில் 1-3 மடங்காக திரும்பி வருவது பலரது அனுபவம்.

உன் உடல் நிலை சரியில்லாதபோது டக்டரிடம் செல்வதற்கு முன்பு ஒரு டோஸ் வாட்டர் வயலட் சாப்பிட்டு செல்ல அவர் அனாவசிய டெஸ்ட், ஸ்கேன் எழுதி தர மாட்டார். ஒழுங்காக கவனித்து குறைந்த அளவு மருந்தில் விரைவாக உன்னை குணப்படுத்தி விடுவார். எல்லா நோயாளிகளிடமும் இருநூற்றி ஐம்பது ஃபீஸ் வாங்குபவர் கூட, உன்னிடம் (வாட்டர் வயலட் சாப்பிட்டு செல்வதால்) 'நீ கொடுப்பதை கொடு' என்று சொல்வார்.

எலும்பு முறிவு அல்லது வேறு நோய்க்கு ஆசுபத்திரியில் அட்மிட் ஆகியிருக்கும் நாட்களில், நோயாளி தினம் ஒரு டோஸ் மேற்சொன்ன வாட்டர் வயலட் சாப்பிட்டு வர, ஆசுபத்திரிக்கு செலவழித்த பணம் பூராவும் திரும்ப கிடைக்கும். ஓய்வு பெற்ற அரசு ஊழியர் (திரு ராகவன், 10, பூரம்பிரகாஷ் ராவ் ரோடு, ராயப்பேட்டை) முப்பதாயிரம் செலவழித்து கண் ஆபரேஷன் செய்து கொண்டார். இவருக்கு தினம் ஒரு வேளை வாட்டர் வயலட் கொடுக்க, அடுத்த வாரம் (இவருக்கு வரவேண்டிய ஊதிய உயர்வு பாக்கி) 30,000 வந்து சேர்ந்தது. மற்றும் பல வருடம் முன்பு தலை முழுகிய கடன் முப்பதாயிரமும் வந்து சேர்ந்தது.

வயது வந்த பெண்ணிற்கு திருமணம் செய்ய நினைக்கும் பெற்றோர்கள் ஸ்வீட் செஸ்ட்நட் என்ற மலர் மருந்து சாப்பிட்டு வர 1-2 மாதங்களில் "வரதட்சணை வேண்டாம், உங்கள் பெண்தான் வேண்டும்," என நல்ல குணம் அமைந்த, நிறைய சம்பாதிக்கும் பையனின் பெற்றோர்கள் வலிய வந்து பெண் கேட்பார்கள். திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன. பெண்ணிற்கு வரன் தேடி வீடு வீடாக ஏறிச் சென்று 'என் பெண்ணை பார்க்க வாருங்கள்' என நமது மூளையை உபயோகித்து செயல்படுவதால், சொர்க்கம் செய்யும் வேலைக்கு தடங்கல் செய்கிறோம். அதனால் சரியில்லாத பையனுக்கு திருமணம் செய்து கொடுத்து, பெற்றோரும் அப்பெண்ணும் காலம் பூராவும் கஷ்டத்தில் நொந்து போகின்றனர்.

ஒரு பஸ்ஸை ஒரே நேரத்தில் இரண்டு டிரைவர்கள் (ஸ்டீரிங்கை பிடித்து) ஓட்டினால் விபத்துதான் நிகழும். பெற்றோர்கள், ஸ்வீட் செஸ்ட்நட் சாப்பிட்டு வர, மாப்பிள்ளை தேடும் விஷயத்தில் மட்டும் அம்மருந்து நமது மூளையை நிறுத்தி வைத்து விடுவதால் சொர்க்கம் தன் வேலையை சுலபமாக செய்து விடுகிறது. (The Bach remedy *Sweet Chestnut* switches off our mind so that heaven can have a free play in selecting the right boy and sending him to the girl's house).

திருமணம் நிச்சயமானவுடன் இம்மருந்தை பெண்ணின் பெற்றோர்கள் தொடர்ந்து சாப்பிட்டு வர, திருமண செலவுக்கான பணம் நிறைய வந்து கொண்டே இருக்கும் (ஆனால் நீங்கள் நினைக்கும் விதத்தில் அல்ல). இது எப்படி?

சொர்க்கத்தில் உள்ள கடவுள் திருமணங்களை நிச்சயிக்கின்றான் எனில், அந்த கடவுள் திருமண செலவுக்கு நிறைய பணம் அனுப்பித்தானே ஆக வேண்டும்?

ஆனால் நிஜ வாழ்க்கையில் அவ்வாறு எவருக்கும் நடைபெறவில்லையே என அங்கலாய்க்கும் நபர்களைப் பார்த்து 'ஸ்வீட் செஸ்ட்நட் என்ற மலர் மருந்து சாப்பிட்டு பாருங்கள்' என இயற்கை அறைகூவல் விடுக்கிறது.

*ஸ்வீட் செஸ்ட்நட்* சாப்பிடுவதால் என்ன நடக்கிறது? திருமண வைபவத்திற்கு நாம் 'திட்டமிடும்' மனதின் செயலை மாத்திரம் இம்மருந்து நிறுத்தி வைத்து விடுவதால் (switch off) கடவுள் நம் மூலமாக வேலை செய்வது தங்கு தடங்கலின்றி நடைபெற்று விடுகிறது.

கடவுள் நிறைய கொடுத்துக் கொண்டிருக்கிறான். அவனைப் பார்க்காமல் நாம் சித்திரகுப்தன் வேலையை (கணக்கு எழுதி பார்த்து) செய்து கொண்டிருக்கிறோம்.

எமது 3-நாள் நேர்முக பாட்ச் மலர் மருத்துவம் வகுப்பில் (கட்டணம் ரூ.6500) பயின்ற டாக்டர் கமலா முகுந்தன் (இராமசந்திரா ரோடு, குரோம்பேட்டை) சொல்கிறார்: "30-8-2001 அன்று எனது ஒரே பெண்ணிற்கு திருமணம் நிச்சயிக்கப் பட்டிருந்தது. இதற்கு ஆறு வாரம் முன்பிருந்தே தினம் ஒரு வேளை நான் *ஸ்வீட் செஸ்ட்நட்* சாப்பிட்டு வந்தேன். இரண்டு வாரம் கழித்து எனது நெருங்கிய உறவினர் இரண்டு இலட்சம் ரூபாய் கல்யாண செலவிற்கு கொடுத்தார். இதேபோல் அடுத்த வாரம் வேறு ஒருவரிடமிருந்து இரண்டு இலட்சம் வந்தது. இதை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

**ஸ்வீட் செஸ்ட்நட் அதியற்புதங்களை நிகழ்த்தக் கூடியது.**

1. உயிருக்கு ஆபத்தான நிலையில் *தீவிர சிகிச்சை பிரிவில்* (I.C. unit) 'இப்போது ஏதும் சொல்ல முடியாது' என்று டாக்டர்கள் கைவிட்ட கேசுகளில் (மூளையில் இரத்தப்பெருக்கு, மூன்றாவது ஹார்ட் அட்டாக் போன்றவை) நோயாளியின் நெருங்கிய உறவினர்கள் ரெட் செஸ்ட்நட், ராக் ரோஸ், ஸ்வீட் செஸ்ட்நட், கார்ஸ் ஆகிய நான்கு மருந்துகளையும் சேர்த்து (2 - 4 மணிக்கோர் தடவை) சாப்பிட்டு வர, நோயாளி விரைவில் குணமாகி விடுவார்:

எமது 3 - நாள் நேர்முக வகுப்பில் பாட்ச் மலர் மருத்துவம் கற்ற பலரது அனுபவம் இது. டாக்டர் பிரபா ராமதுரை, (போன்: 24338505) சொல்கிறார்: என்னிடம் வந்த ஒரு முஸ்லிம் பெண்மணி, அவரது கணவனுக்கு மூன்றாவது ஹார்ட் அட்டாக் வந்து *தீவிர சிகிச்சை பிரிவில்* இருப்பதாகவும், அவரைக் காப்பாற்ற நான் ஏதாவது செய்ய முடியுமா என கேட்டாள். அவருக்கு மருந்து தர இயலாது எனவும் ஆனால் (தன் கணவனைப் பற்றி அக்கரைப்படும்) அவளுக்கு *ஸ்வீட்செஸ்ட்நட், ரெட்செஸ்ட்நட், ராக் ரோஸ், கார்ஸ்* கொடுத்து, இவற்றை அவள் தினம் 3 வேளை சாப்பிடுவதால் அவள் கணவன் பிழைத்து விடுவான் என சொல்லி அனுப்பினேன். இவள் இவ்வாறு சாப்பிட, மறு தினமே, டாக்டர்களே ஆச்சர்யப்படும் விதத்தில் அவள் கணவன் உடல் தேறி வார்டுக்கு மாற்றப்பட்டு அதற்கு மறு தினம் வீட்டிற்கே வந்து விட்டார்.

2. உங்கள் உறவினர் பயணம் செய்து கொண்டிருக்கும் விமானம் கடத்தப்பட்டு விட்டதா? அவர்கள் சீக்கிரம் விடுதலையாகி பத்திரமாக வீடு திரும்ப நீங்கள் சாப்பிடவேண்டிய மலர் மருந்துகள் *ரெட் செஸ்ட்நட், ராக் ரோஸ், ராக் வாட்டர், ஸ்வீட் செஸ்ட்நட், கார்ஸ்.*

இம் முறையில் மொத்தம் 38 மருந்துகள் உள்ளன. எல்லாம் ஒரே விலை தான். ஒவ்வொன்றும் 150 மாத்திரைகளடங்கிய 5ml புட்டி விலை ரூ.75=00 மட்டுமே. எவ்வயதினராயினும் ஒரு மாத்திரை சுவைத்து சாப்பிடவும். பத்தியம், பக்க விளைவு இல்லை. மருந்து சாப்பிட மறுக்கும் நபர்களுக்கு மாத்திரைகளை தண்ணீர், காபி, டீயில் கலந்து கொடுக்கலாம்.

## வட்டமேஜை

'வீட்டில் முதலில் ஒரு தெர்மா மீட்டரை வாங்கி வைத்துக்கொள் ளுங்கள்' - டாக்டர் நிகிலா ஷர்மாவின் அட்வைஸ் சூப்பர்!

**- ஜி. குப்புசாமி, சங்கராபுரம்**

பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு என்பதை இந்தி யாவும், குனியக் குனியக் குட்டு பவனும் முட்டாள்தான் என் பதை சீனாவும் உணரும்படி அமைந்திருந்தன கார்ட்டூனும் தலையங்கமும்.

**- த.பரதன், திருவாரூர்**

சாந்தகுமார் - ப்ரியாவின் மனக் கண்ணில் மலர்ந்த காதல் இதயத் தைத் தொட்டது!

**- ஏ.பி.எஸ்.ரவீந்திரன், வள்ளியூர்**

தீக்குச்சிக்கு மருந்து சேர்க்கும் குழந்தைத் தொழிலாளியாக இருந்த பாண்டியராஜன், இன்று லட்சத்துக்கும் மேலான தொழிலாளர் களுக்கு வேலை தேடித் தரும் பொறுப்பில், ஒரு நிறுவனத்தின் தலைவராகத் திகழ்வதை நினைத்து நெஞ்சம் பெருமை கொள்கிறது!

**- லலிதா வெங்கடேசன், சென்னை - 4**



# ஒளி கொடுக்கும்

எட்டு வருட அரும் உழைப்பின் பய னாக, 'தற்காலத் தமிழ் அகராதி' மலர்ந் திருப்பது வரவேற்கத்தக்கது.

**- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்**

ஐந்து ஆண்டுகளாக எஸ்.எஸ்.எல்.சி தேர்வில் நூற்றுக்கு நூறு தேர்ச்சி விகிதம் காட்டி, சாதனை படைத்து வரும் வட சென்னை வால்டாக்ஸ் சாலையிலுள்ள மாநக ராட்சி உயர்நிலைப் பள்ளிக்கு, பாராட்டுகள்!

**- என்.எஸ். மணிமாறன், திருவண்ணாமலை**

சுடும் ஈரம் சிறுகதை, முதுமைக்குள் ளிருக்கும் உண்மையான கரிசனத்தையும் அன்பையும் சுட்டிக்காட்டியது.

**- டி.சந்திரன், ஈரோடு**

மனைவி ஒன்று, காதல் இரண்டு, பாண்டியராஜனின் கதை சுவாரஸ்யம். தடைகள் பல தாண்டி உச்சத்துக்குப் போன நிகழ்வுகள் மற்றவர்களுக்கு வழிகாட்டும்.

**- கோபி தமிழரசு, சாம்ராஜ்நகர்**

இரண்டு பக்கத்துக்குள், ஜெர்மனி யின் மியூனிச் நகரையும், பெர்லினையும் சுற்றிக் காட்டி அசத்திவிட்டார் லீனா மணிமேகலை.

**- ஆர்.பழனிக்குமார், மதுரை 14.**

**மா**ஸ்டர் தெனாலிராமன், நாடக செய்திகள் கலக்கல். வரவேற்று ஆதரிக்க வேண்டிய முயற்சி. பாராட்டுகள்!

**- ரவீந்திரன், நாகர்கோவில்**

**அ**மரர் கல்கியின் 'புலிராஜா' நெடுங்கதை, நகைச்சுவையான குசும் போடு எழுதுவதில் 'கல்கி' புலிதான் என்பதை நிரூபித்தது. புலி... புலி தானே...!

**- வானவில் மூர்த்தி, கடலூர்**

**தி**ரைப்பட சம்பந்தமாக உழைத்த எல்லோரையும் ஒருங்கே பாராட்டி விமர்சித்திருந்ததும் ஒரு சிறப்பான க(ா)லைப் ப(ணி)ணியே!

**- சுகந்தி நாராயண், சென்னை - 39**

'**வ**ல்லமை தாராயோ' சிறுகதை, நடுத்தர வர்க்கத்துத் தந்தையைத் தத்ரூபமாகப் படம்பிடித்துக் காட்டியது!

**- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி**

# தீக்குச்சி!

**ஒ**ரு இலட்சத்து எண்பத்தைந்தாயிரம் பேருக்கு வேலைவாய்ப்பு அளித்துள்ள பாண்டியராஜன், லதாராஜன் தம்பதியின் சாதனை மிகவும் அருமை! வெளியிட்ட கல்கிக்குப் பாராட்டுகள்!

**- ஆர்.வி.கிருஷ்ணமூர்த்தி, சென்னை - 44**

**த**ன்னந்தனியாக ஆளில்லா கிராமத்தில் வாழ்கிற ராமசுப்பு பற்றிய கட்டுரை, பிரமிப்பு + திகைப்பு ஏற்படுத்திவிட்டது!

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

**எ**த்தனுக்கு எத்தன் எங்கேயும் உண்டு என்பதையும் அந்தக் கால போலீஸின் 'மாமூல்' வாழ்க்கை பற்றியும் அமரர் கல்கியின் 'போலீஸ் விருந்து' சாப்பிட்டு - ஸாரி, படித்துத் தெரிந்து, மகிழ்ந்தேன்!

**- எஸ்.வெங்கட்ராமணன், சென்னை - 33**

**பா**.ம.க.வை கலைஞர் கழற்றிவிட்டது மிகவும் சரியே! திண்டாடப்போவது தி.மு.க அல்ல; பா.ம.க.தான்!

**- என்.சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்**

**இ**ளம்தலைமுறையினரும் ஆடைக் கட்டுப்பாடு அவசியம் என்பதை உணர்ந்திருப்பது பாராட்டப்பட வேண்டியது. 'ஆள் பாதி; ஆடை பாதி' என்பது மிகவும் கருத்தில் கொள்ளப்பட வேண்டியது.

**- சி.மகேஷ், திருச்சி**

**க**மல் படம் என்பதற்காக ஆஹா ஓஹோ என்று ஒரேயடியாகப் புகழாமல், குட்ட வேண்டிய இடங்களில் குட்டிய தசாவதார விமர்சனத்துக்கு சபாஷ்!

**- என்.காளிதாஸ், சிதம்பரம்**

**அ**ற்புதமான படைப்பு நம்ம உடம்பு. அதைச் சரியா முறைப்படுத்தி, எல்லா காரியங்களையும் செய்ய உதவும் சிறப்பான மருத்துவமுறையான 'பிசியோதெரபி', மறு வாழ்வு வைத்தியம்தான்!

**- கே.வி.ராமன், சென்னை**



# உலகைப் முத்தமிடு!

"இந்தப் புத்தகத்தை எந்த வயதினர், படித்தாலும், ரசிக்க முடியும்; வாழ்க்கையின் சில புதிய பாடங்களைக் கற்றுக்கொள்ள முடியும்'' என்கிறார் இன்ஃபோசிஸ் நாராயணமூர்த்தி. அந்தப் புத்தகத்தின் தலைப்பு: 'Go Kiss the World'. எழுதியவர் : சுப்ரதோ பாக்சி. புகழ்பெற்ற 'மைண்ட் ட்ரீ' என்ற கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் நிறுவனத்தின் நிறுவனர். அண்மையில் சென்னை வந்திருந்த சுப்ரதோ பாக்சி நம்மோடு பேசினார்...

''நான் ஒரிஸா மாநிலத்தில் பாட்னாகர் என்ற சிறிய ஊரில்தான் பிறந்தேன். என் அப்பா ஓர் அரசு அதிகாரி. படிப்பை முடித்த நான், அரசு அலுவலகத்தில் எழுத்தராகத்தான் என் வாழ்க்கையைத் தொடங்கினேன். ஆனால், அரசாங்க இயந்திரத்தின் ஓர் அங்கமாக, வாழ்க்கையை ஓட்டுவது சாத்தியமில்லை என்று சீக்கிரமே புரிந்துகொண்டேன். பல தனியார் நிறுவனங்களிலும் பணியாற்றிவிட்டு வெளியேறி, 'மைண்ட் ட்ரீ' சாஃப்ட்வேர் கன்சல்டன்சி நிறுவனத்தை நண்பர்களுடன் சேர்ந்து ஆரம்பித்தேன்'' என்று சொல்லும் சுப்ரதோவிடம், ''ஏன் உங்கள் புத்தகத்துக்கு இப்படி ஒரு தலைப்பு?'' என்று கேட்டால்,

''என் அம்மா ஸ்ட்ரோக் தாக்கி, ஆஸ்பத்திரி ஒன்றில் சிகிச்சைக்காகச் சேர்க்கப்பட்டிருந்தார். அப்போது அமெரிக்காவில் வசித்த நான், இரண்டு வார லீவில், வந்திருந்தேன். இரண்டு வாரங்களும் ஆஸ்பத்திரியில் அவர் அருகிலேயே இருந்தேன். ஊருக்குப் புறப்படும் நாள். வீட்டிலிருந்து ஏர்போர்ட்டுக்குச் செல்லும் வழியில், அம்மாவைப் பார்க்க வேண்டும் போல இருந்தது. மீண்டும் ஆஸ்பத்திரிக்குச் சென்று, கண் பார்வை இல்லாத என் அம்மா நெற்றியில் முத்தமிட்டேன். தம் கை விரல்களால் என் தலையைத் தடவியபடியே, 'என்னை எதற்காக முத்தமிடுகிறாய்? புறப்படு! இந்த உலகத்தை முத்தமிடு' என்று சொன்னார். அதையே தலைப்பாக வைத்துவிட்டேன்'' என்றவரிடம், ''சென்னையைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்'' என்றால்

''ஒருமுறை சென்னை வந்திருந்த சமயம். நல்லி கடை அருகில் வெள்ளரிக்காய் வியாபாரம் செய்துகொண்டிருந்த ஒருவர், ஒரு ரூபாய்தான் விலை சொன்னார். 'வெள்ளரிக்காய் துண்டின் விலையை அதிகரிக்கலாமே!' என்று அவரிடம் சொன்னதும், 'அதிக லாபத்தைவிட, கஸ்டமர் சாடிஸ்ஃபாக்ஷன்தான் சார் முக்கியம்!' என்றார். மேலும், நான் பெங்களூரிலிருந்து வந்திருக்கிறேன் என்று கேட்டுத் தெரிந்துகொண்டு, ஆங்கிலத்தில், கர்நாடக அரசியல், காவிரிப் பிரச்னை, பருவ மழை மாறுபாடுகள்... அதன் விளைவுகள் என்று பேசினார். தோற்றத்தைக் கொண்டு, எடை போட்டுவிடக் கூடாது எனப் புரிந்துகொண்டேன்! அது மட்டும் பிஸியான இடமாக இல்லாமல் இருந்திருந்தால், அவர் கால்களில் விழுந்து வணங்கி இருப்பேன்'' என்கிறார் சுப்ரதோ.

– எஸ்.சந்திரமௌலி

படம்: கௌதம் ராம்

❋ சுப்ரதோ பாக்சி

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57"Registered No. TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.











